'பெருஞ்சொல் விளக்கனார்'

# உயர்திரு அ. மு. சரவண முதலியாரவர்கள்

# நினைவு மலர்






மணிவாசக மன்றம்

அரியலூர்

முத்தமிழ்ப்பண்ணை - அரங்கராசன்
22.12.72

15-6



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவாதவூரர் திருத்தாள் துணை

ி ஆண்டு பங்குனித் திங்கள் உ-ம் நாள் (15—3—1959)

சிவபதம் அடைந்த,

ணிவாசக மன்றத் திறப்பாளரும்,

புரவலரும், தலைவரும் ஆகிய,

சொல் விளக்கனர்', 'முதுபெரும் புலவர்'

திரிசிரபுரம்

# திரு அ. மு. சரவண முதலியாரவர்கள்

# நினைவு மலர்






அரியலூர்

மணிவாசக மன்றம்

1959

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

*" அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியைநீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே. "

திருச்சிற்றம்பலம்.

(பொது—தனித்திருத் [illegible]ண்டகம்)
—ஸ்ரீ திருநாவுக்கரசு [illegible]வாமிகள்

*இவ்வருமைத் திருத்தாண்டகம், திரு. ஐயா அவர்கள [illegible] சிறந்தன வாகக் கருதிப் பாடப்பட்ட பாடல்களுள் தலையான தொன் [illegible]ம்.

முத்தமிழ் அச்சகம், காஞ்சிபுரம்.

மணிவாசக மன்ற வெளியீடு. ரு.

உ

## இது

நாயிற் கடையாய்க் கிடந்த அடியேங்களுக்குத் தாயிற் சிறந்த தயா வுடையவர்களாகவும்; தந்தையும் தாயும், சார்கதியும், அந்தமிலா இன்பமும், உயிரும், சரணும், அருட்கோவும் ஆகவும், 'குருதேவர்' ஆகவும் உள்ள,

திருப்பெருந்திரு

**பெருஞ்சொல் விளக்கனுர் அவர்களுடைய பொன்னுர் திருவடிகளில் சமர்ப்பிக்கப் படுகின்றது.**

**அரியலூர்** — **மாணவச் சிறுவர்கள்**
17-1-1960 மணிவாசகமன்றம்.

" திரு. அ. மு. ச. ஐயா அவர்கள்பால் நீங்கள் கொண்டுள்ள மெய்யன்பு, சைவத் திருக் கூட்டத்தா ரத்தனைபே ரிடத்தும் கொண்ட பேரன்பு ஆகும். "

—(ஒப்பம்) **ஈசானசிவாசாரியார்,** பழனி



தோற்றம் : **1887** மறைவு : **1959**

'பெருஞ்சொல் விளக்கனர்'

'முதுபெரும் புலவர்'

உயர்திரு. அ. மு. சரவண முதலியாரவர்கள்

உ

# உள்ளுறை







# முன்னுரை



இந்நினைவு மலர்க்கு உரியவர்களாகிய உயர் திரு. 'பெருஞ்சொல் விளக்கனுர்' 'முதுபெரும்புலவர்' அரசங்குடி மு. சரவண முதலியார் அவர்கள், இருபதாம் நூற்றுண்டுப் புலவர்கள் வரிசையில் தலையாயவர்களுள் ஒருவராக வைத்துப் போற்றத்தக்கவர்கள். அப்புலவர் களாலும் ஏனைய கற்றறிந்தவர்களாலும், 'அறிவிற் சிறந் தவர்' எனப் புகழப்பெற்ருர்கள். ஆதலால் அவர்களை அறியாத அறிவுடையயோர் இல்லை என்றே கூறலாம். எனவே அறிஞர் உலகிற்கு அவர்களை அறிமுகம் செய்து வைக்கத் தேவை இல்லை. யான் அரியலூர் கழக உயர் நிலைப்பள்ளிக்குத் தமிழாசிரியனுக வந்த பின் சிலகாலம் அவர்கள் தலைமைத்தமிழாசிரியராக வேலைபார்த்துக் கொண்டிருந்தார்கள். அது முதல் அவர்களோடு தொடர்புடையவனுயினேன்.

அரியலூர் மு. பாலசுப்பிரமணியன், வெள்ளூர் க. குமரவேல் என்ற இருவரும் என்னிடமும் திரு. அ. மு. ச அவர்களிடமும் படித்தார்கள். எங்கள் அன்பிற்குரிய மாணவர்கள், எங்கள்பால் கொண்டுள்ள அபிமானம், பணிவு, மதிப்பு ஆகியவைகள் அளவிலடங்காதன.

அம்மாணவர்கள் இருவரும் படிப்பு முடிந்த பின் 1943ல் 'மணிவாசக மன்றம்' துவங்கும் விருப்பத்தினை எங்களிடம் தெரிவித்தார்கள். அவ்வாறு துவங்கப் பெற்று நடந்து வருவதே இம்மணிவாசக மன்றமாகும்.

பெருஞ்சொல் விளக்கனார் அவர்களுடைய மறைவு, பொதுவாக அனைவருக்குமே பெருவருத்தம் தருவதாயினும் சிறப்பாக, 'அவர்கள், எங்களுக்கும் மன்றத்திற்குமே உரியவர்கள்; நாங்களும் மன்றமும் அவர்கட்கே உரியவர்கள்' என்ற முறையில் எங்களுக்கு அது ஆற்றுதற்கரிய துன்பம் தருவதாய் இருக்கின்றது. அவர்கள் பிரிவைப் பெரிதும் ஆற்ருதவர்களாகிய மாணவர்களுடைய கருத்துப்படி அவர்கள் நினைவாக இம் மலர் வெளிவருகின்றது. மலரில் அவர்களுடைய வரலாற்றுச் சுருக்கமும், சிறப்புக்களும், பண்புகளும், கருத்துக்களும், பாடல்களும், கடிதங்களும், பிறவும் இயன்ற அளவால் இடம் பெற்றுள்ளன. இவைகளிலிருந்து மாணவர்களுக்கும், அவர்களுக்கும் இருந்த நெருங்கிய தொடர்பும், அவர்களுடைய உயர்ந்த உள்ளக்கிடக்கைகளும், சிறந்த பேரறிவுத் திறமும், மாணவர்களுடைய குரு பக்தியும் ஒருவாறு விளங்கும். இந்த நினைவு மலர் அவர்கள்பால் தொடர்புடைய அனைவர்க்கும் ஆறுதல் அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நினைவு மலர் நன் முறையில் வெளிவரப் பெருந்துணையாயிருந்த அனைவர்க்கும் நல்லன எல்லாம் மேலும் தர, ஸ்ரீ அமுதகடேசர் அபிராமியார் திருவடியிணைகளை வணங்குகின்றேன்.

அரியலூர்,
7-8-1959.

க. முருகேச முதலியார்,
துணைத்தலைவர்.
மணிவாசக மன்றம்.

# நன்றி உரை



தமிழர்—சைவர்—முதலியார்—தமிழாசிரியர்-பெரிய புராண அரிய விரிவுரையாளர்—முதுபெரும் புலவர்—ஏழையேங்களுடைய குரு தேவர் அவர்கள் சென்ற பங்குனி மீ உ (15-3-1959)ம் ௳ ஞாயிற்றுக்கிழமை சஷ்டி கிருத்திகை நாளில் இறைவன் திருவடி நீழலெய்தினார்கள். அவர்களை இழந்த தமிழ் உலகும், சைவ உலகும் செஞ்ஞாயிற்றினை இழந்த பகலும், வெண் டிங்களை இழந்த இரவும் போல்வன ஆயின. தொண்டர் சீர் பரவுவாருள், இவர்களை ஒத்தார் இவ்வண்டத்தவருள் எவருமே இல்லை என்பதை ஒருவரும் மறுத்தல் இயலாது.

ஐயா அவர்கள் பெரியபுராண நயத்தினைப் பலவாற்றானும் நுணுகி ஆராய்ந்து விரிக்குங் காலத்துக்கேட்கும் அவையினருள் தக்காரும் மிக்காரும், ஆகிய பலர் புளகாங்கிதம் கொண்டும், கைதட்டியும், மெய் மறந்து எழுந்து குதித்தும், கைகுலுக்கியும், வணங்கியும் போற்றிப் பாராட்டியதைக் கேட்டதும் கண்டதும் உண்டு.

அவர்களிடம், மாணவர்களாய்ப் படிக்கும் பேறு பெற்ற ஏழையேங்கள் பால், அவர்களைக் கொண்டு துவங்கப்பட்ட மணிவாசக மன்றத்தின்பால் அவர்கள் கொண்டிருந்த பேரன்பு இத்தன்மையது என்று கூறல் இயலாது. அவர்கள் ஏழையேங்களோடு ஒன்றிக்கலந்து ஒன்றாய்ப் பழகினார்கள் என்பதை, இப்பால் தவறியனபோக எஞ்சிய ஒன்றுசேர்க்கப்பெற்றுள்ள அவர்கள் திருக்கரத்தால்

ஏழையேங்கட்கு எழுதப்பட்ட கடிதங்களின் எண்ணிக்கை 313 என்பது கொண்டு அறியலாம். அத்துணை நன் முறையில் நெருங்கியிருந்த அவர்கள் பால் ஏழையேங்கள் கொண்டுள்ள பெரு மதிப்பிற்கும், அபிமானத்திற்கும் அடையாளமாக அவர்களுடைய திருவடிகளில் சாத்தப் பெற இம்மலர் மலர்வதாயிற்று.

இந்நினைவு மலர்க்குக் 'குருவருள்', அருங்கருத்துக் கள்,'புலவர்கள் தலைவர்' ஆகியவைகளை முறையே எழுதிக் கொடுத்துதவிய திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர் கள், திரு. சொ. கிருஷ்ண பிள்ளை அவர்கள், திரு. வி. திருமால் அவர்கள் ஆகியோர்களுக்கும், இந்நினைவு மலரினை ஏழையேங்கள் விரும்பி வேண்டிக் கொண்ட வாறே அச்சிட்டுத் தந்து உதவிய திரு. சி. காளப்ப முதலியார் (காஞ்சி, முத்தமிழ் அச்சக உரிமையாளர்) அவர்களுக்கும், 'இம் மலரினைத் திருத்தியுதவிய காஞ்சி. திரு. அருணைவடிவேல் முதலியார் அவர்கட்கும்,' துணை செய்தார் ஏனைய அனைவருக்கும் ஏழையேங்களுடைய நன்றியினைச் சொந்தச் சார்பிலும், மணிவாசக மன்றத் தின் சார்பிலும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

ஏழையேங்களையும் ஓர் பொருட்படுத்தி உண்ணின் றும் புறத்திருந்தும் கலந்து ஆண்டுகொண்டு, வேண்டிப் பணிகொண்டு, புன்னெறியதனிற் செல்லும் போக்கினை மாற்றி இந்நெறி செலுத்தி ஆளும் திருவருளினையும் குருவருளினையும் முப்போதும் எப்போதும் போற்றி வணங்குகின்றோம்.

*அரியலூர்,*
*8-8-1959.*

மாணவச் சிறுவர்கள்
**மணிவாசக மன்றம்**

உ

# 1. குரு தேவர்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

### தோற்றம்

சிவத்திரு. அ. மு. சரவண முதலியார் அவர்கள் திருச்சிராப்பள்ளி மாவட்டம், லால்குடி வட்டம், அரசங்குடி என்ற ஊரில் சைவ வேளாளர் குடியில் தொண்டமண்டல முதலியார் மரபில் திரு. முத்துச்சாமி முதலியார் அவர்களுடைய, திரு. சிதையம்மையார் அவர்களுடைய முன்னைத் தவப்பயனுய்த் தோன்றியருளினுர்கள். இவர்களுக்கு உடன் பிறந்தோர், மூத்தோர் இருவரும் இளையோர் இருவரும் ஆவர். இளமையில் அற நூல்களையும், நீதி நூல்களையும், இதிகாச புராணங்களையும் கேட்டும் கற்றும், தம்முள் எழுந்த தமிழ் படிக்கும் பேரார்வத்தால் தாமே பெரிதும் முயன்று பயின்ருர்கள். பின்னர், திருமுறைகள், சாத்திரங்கள், ஏனைய தோத்திரங்கள் ஆதியவற்றிலும் வல்லவர்களானுர்கள். பெரிய புராணம் இவர்களால் மிகவும் சிறப்பாக நுணுகி ஆராய்ந்து போற்றிப் படிக்கப்பட்ட நூலாகும். சிலப்பதிகாரமும் அவர்கள் உள்ளங்கவர்ந்த நூல்களுள் தலையாயதொன்று.

## ஆசிரியத் தொழிலும் ஓய்வும்

இவர்களுடைய புலமை நலங்கண்டு செட்டி நாட்டினர், கீழைச்சிவல்பட்டி மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கலா சாலைத் தலைவராகவும், பின் திருச்சிராப்பள்ளி மாவட்டக் கழகத்தினர், லால்குடி, அரியலூர், கழக உயர் நிலைப் பாடசாலைத் தமிழாசிரியராகவும் இவர்களை இருக்கச் செய்தார்கள். இவ்வாறு பல ஆண்டுகளாக எண்ணில்லாத பல மாணவர்களுக்கு இன் தமிழ்ப்பாடம் போதித்தார்கள். ஏழையேங்கள் திரு. ஐயா அவர்கள்பால் *1935, 1942* ஆகிய ஆண்டுகளில் மாணவர்களாக இருந்து தமிழ் பயிலும் பேறு பெற்றோம். அது முதலே அவர்களுடைய அரிய தொடர்பு ஏழையேங்கட்குக் கிடைத்தது. அவர்களைக்கொண்டே *1943*-ம் ஆண்டில் மணிவாசக மன்றம் திறந்து வைக்கப்பட்டது. பின் *1943* இறுதியில் அவர்கள் தமது தமிழாசிரியர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார்கள். ஒரு வகையால் ஓய்வு பெற்றாலும், பின்னரும் தமிழ் படித்தோரும், தாம் விரும்பும் குறிப்பிட்ட நூல்களைப் பாடங்கேட்டோரும், தொடர்ந்து வந்து தமது ஐயங்களை அகற்றிக்கொண்டோரும் பலர் ஆதலால், இவர்கள் மற்றெல்லாவகைகளாலும் இறுதிவரை பெரும் பேராசிரியராகவே விளங்கி வந்தார்கள்.

## பெருமைகள்

திரு. ஐயா அவர்கள் சுமார் *30—35* ஆண்டுகளாக இத்தமிழ் நாட்டிலும், கடல் கடந்து சென்று இலங்கை மலேயா நாடுகளிலும் சொற்பொழிவுகளாற்றியிருக்கின்றார்கள். இவர்களை அழைத்துச் சொற்பொழிவுகளாற்றச் செய்து கேட்டு மகிழ்ந்து பயன் பெறாத சபைகள், கழகங்கள், மன்றங்கள், மடாலயங்கள், பாடசாலைகள், கல்லூரிகள் பல்கலைக் கழகங்கள், சைவ வைணவத்

திருக்கோவில்கள் எவையுமே நம் நாட்டில் இல்லை என்றே கூறலாம். இவர்களுடைய சொற்பொழிவுகள் தனித் தனியே நிகழ்த்தப்பட்டன எண்ணில்லாதனவும் தொடர்ந்து நிகழ்த்தப்பட்டன மிகப்பலவும் ஆகும். இவர்கள், அண்ணுமலைப் பல்கலைக் கழக ஆசிரியர் போதனு முறைப் பயிற்சிப் புலவர் மாணவர்களுக் குப் பாடஞ்சொல்லச் சென்றகாலை, புலவர் மாணவர் களுக்கு மட்டுமன்றி அங்கிருந்த புலவர் பெருமக்களுக் கும் வேண்டுவனவற்றை யெல்லாம் விளக்கிக்கூறி அனை வரையும் மகிழ்வித்தமையினுல், 'புலவர் திலக'மென அப் பல்கலைக் கழகத்தாரால் புகழப்பட்டார்கள். திருக் கோவலூர் ஆதீனம் காலஞ்சென்ற 5-வது பட்டம் திருப்பாதிரிப்புலியூர் 'ஞானியார் சுவாமிகள்' என்று உலகினரால் புகழ்ந்து வழங்கப்பெறும் திருப்பெருந்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர் களால் ஏற்படுத்தப்பட்டிருந்த பெரிய புராண ஆராய்ச் சிக் கட்டுரைப் போட்டிக்குப் பலர் அனுப்பியிருந்த பல கட்டுரைகளுள்ளும் இவர்களுடைய கட்டுரையே, எல்லா வகையாலும் தலைசிறந்ததெனத் தக்கோர் பலரால் தெரிந்தெடுக்கப் பெற்றுப் பரிசு வழங்கப்பட்டுச் சிறப்பிக் கப்பட்டதாகும். திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையிலே சபையினர் விருப்பப்படி தொடர்ந்து பெரிய புராணச் சொற்பொழிவுகளாற்றி, அவைகளின் நிறைவு விழாவில், அச்சபையினரால் கற்றறிந்த முற்றறிவாளர் முன்னிலை யில் திரு. 'பண்டிதமணி' 'முதுபெரும் புலவர்' 'பெரும் பேராசிரியர்' மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் சீரிய தலைமையில், 'பெருஞ்சொல் விளக்கனுர்'–'பெரிய புராண விரிவிரையாளர்' என்ற பட்டங்கொடுத்துப் பாராட் டப்பட்டார்கள். பெரியபுராணத்தினை விளக்கி உரை செய்வதில் அவர்களுக்கு ஒப்பாவார் அவர்களேயன்றி

இப் பாரில் வேறு எவருமே இல்லை என்பதை அவ் வுரையினைக் கேட்டோர் அறிவர். சேக்கிழார் சுவாமி களின் புலமைப் பெருமையினை விரிக்கு முகமாக அவர் களுடைய தெய்வமணக்குஞ் செய்யுள்களுக்கு, எழுத்து எண்ணிப் பொருள் செய்து, அச் சேக்கிழார் பெருமானு ராலேயே கூட எண்ணப்படாத கருத்துக்களோ எனு மாறு, திருத்தமான முறையில், முன்னும் பின்னும் துருவி ஆராய்ந்து பொருத்தம் கூறித் தெளிவு செய்வது முத்தி யின்பத்தினும் முழுமையின்பம் தருவதாக இருக்கும். அச்சபையிலேயே தொடர்ந்து திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் ஆகியவைகளையும் விரித்துக் கூறினுர்கள். திருப்பனந்தாள் ஆதீனம் காசிவாசி திருப்பெருந்திரு அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், 'ஓர் ஆண்டில் அதிக மாவட்டங்களில் அதிக சமயச் சொற் பொழிவுகளாற்றியவர்களுக்கு உரியது' என்று வைத் திருந்த ரூபாய் ஆயிரம் பரிசு பெற்றுர்கள். மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீனம் திருப்பெருந்திரு சோம சுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள், அறிவாலும் அனுபவத்தாலும் ஆண்டுகளாலும் முதிர்ந்த இவர்களு டைய பன்னூற்பரப்பின் நுண்மாண் நுழைபுலப் பெரு மையினை உணர்ந்து. 'முதுபெரும் புலவர்' என்ற பட்டங் கொடுத்து மகிழ்ந்தார்கள். அண்மையில் தருமபுரம் ஆதீனமும், தமது திருச்சி மௌனமடம் கட்டளைச்சார்பில் இவர்களைக் கொண்டு தொடர்ந்து பெரியபுராண விரி வுரைகள் நடத்துவித்துச் சிறப்புச் செய்தது. வானெலி நிலையத்தினர் நம் ஐயா அவர்களை அழைத்துப் பன் முறை அரிய தலைப்புகள் பலவற்றினைப்பற்றிப் பல சொற் பொழிவுகளாற்றச் செய்து ஒலி பரப்பியுள்ளனர். தக்க முறையில் நடைபெறும் மணவிழாக்களும், மணிவிழாக் களும், மாநாடுகளும், கவி அரங்குகளும், பட்டி மண்டபப்

போட்டிகளும், பாராட்டு விழாக்களும் நம் ஐயா அவர்களைப் போற்றி அழைத்துப் பொலிவு பெறும். தமது உயிரினும் சிறந்தவர்களாகிய, 'நாவலர்' 'பண்டித' திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் உடன் இருந்து திருவிளையாடற் புராணத்திற்கு ஓர் அரிய உரையெழுதப் பெருந்துணை யாயிருந்து எழுதினார்கள். 'சிவக நம்பி' 'கட்டுரைப்பொழில்' 'அமுது அடியடைந்த அன்பர்' ஆகிய நூல்களும் எழுதியுள்ளார்கள். ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமிகள், ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறுகளும் ஆராய்ச்சியும் கொண்ட 'இரு பெரு மக்கள்' என்ற இவர்களால் எழுதப்பட்ட நூல் கையெழுத்துப் பிரிதியாய் அச்சாக இருக்கின்றது. இவர்களால் பத்திரிகைகட்கும், விழா மலர்கட்கும் எழுதப்பட்ட கட்டுரைகளும் பல உண்டு. பெரியோர் பலரைப் பாராட்டியும், வரவேற்றும், உபசரித்தும், வியந்தும், இரங்கியும் இவர்கள் பாடிய பாடல்களும் பல உள்ளன. உரைநடை, படிப்போர் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு, அறிவையும், உணர்வையும் பற்றிச் செல்லும், சிங்கமெனச் செம்மாந்த சீர்சால் பீடு நடையுடையதாக இருக்கும். பாடல்கள் ஆற்றொழுக்கென உயர்ந்த உயிர்ப் பொருள்களை உயிர்ப்பனவாக அமையும்.

### பண்புகள்

திரு. ஐயா அவர்கள் இளமை முதலே அகன்றும் சூழ்ந்தும் ஆழ்ந்தும் படிக்கும் இயல்புடையவர்கள். ஓய்வு கிடைக்கும்போதெல்லாமும் எப்போதுமே நூல்களைப் படித்துக்கொண்டே இருப்பார்கள். நினைவு ஆற்றல் மிகவும் உடையவர்கள். சொற்பொழிவிற்குக் குறித்த இடத்திற்குக் குறித்த நேரத்திற்குச் சென்று குறித்த பொருளைப்பற்றிக் குறித்த நேரத்தில் பேசி முடிப்பதாகிய

தமது கடமையினை நிறைவேற்றுவதை உயர்ந்த கொள் கையாகக் கொண்டவர்கள். இவர்கள் ஒத்துக்கொண்ட இடத்திற்குச் செல்லத் தவறுவதே இல்லை என்றே கூற லாம். யாது ஒன்றிலும் பிறர் எவரும் குறைகாணுதவாறு கண்ணுங் கருத்துமாகச் சிந்தித்துத் தம்முள் தெளிந்தே நடந்துகொள்ளுவார்கள். குளிர்ந்த இனிய மணிக்குரலில் கம்பீரமான தன்மையில் உணர்ச்சி வயப்பட்டு நெடு நேரம் பேசுவார்கள். கேட்போர்களும் தம் வயம் இழந்து உணர்ச்சி வயப்பட்டு, முடியும் நேரம் வரை இருந்து கேட் பார்கள். எடுத்துக்கொண்ட பொருளில் ஒன்றிக் கலந்து இடையிடையே உரிய இசையோடு தக்கவாறு பாட்டுக் களைப் பாடி நிறுத்துவது, கேட்போர்க்குத் தனி இன்பம் தந்து புளகாங்கிதம் கொள்ளச் செய்வதாய் இருக்கும். சொற்பொழிவுகள், இளைஞர், பெரியவர், மாணவர், பிரமசரியமாதிய நால்வகை நிலையினர், முதியவர், ஆசிரி யர், இல்லறத்தினர், துறவறத்தினர், தோத்திரம் சாத்தி ரம் விரும்பும் பக்தர்கள், ஆண்பாலார், பெண்பாலார் ஆகிய அனைவர்க்கும் வேண்டும் பொருள்கள் யாவும் பொருந்தியனவாக அமையும். ஆகவே கேட்டோர் எவரே யாயினும் மகிழ்ந்து பாராட்டாமலிரார். நன்கு படித்துத் தொகுத்துத் தயாரித்துக்கொண்டே வகுத்தும்விரித்தும் வரையறுத்தும் பேசிப் பேசியவைகளின் சுருக்கமும் கூறி முடிப்பது எல்லோரையும் வியப்புறச் செய்யும். பேசும்போது, பழமொழிகளுக்கு இக்காலத்து வழங்கும் புதுப்பொருள்களோடு, அவைதோன் றிய அக்காலத்துப் பழைய பொருள்களையும் மறுத் தும் உடன்பட்டும் சுருதி, யுக்தி, அனுபவங்களால் கூர்ந்து ஆராய்ந்து காணுவது கேட்போர்க்குப் புதிய உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் தரும். நகைச் சுவை ததும்பும் சிறு கதைகளாலே, பெரும்பொருள்களை

விளக்குவார்கள். அவை, அவையினருடைய சோர்வினை நீக்கி, அவர்களுக்கு ஆர்வத்தினையும் இன்பத்தினையும் விளைவிக்கும். நூல்களையும் உலகியல் அனுபவங்களையும் கொண்டு வாழ்க்கைப் படிப்பினைகளை வாரி வாரி வழங்குவார்கள். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணிகளின் நயங்களை அள்ளி அள்ளி வீசுவார்கள். இலக்கணக் குறிப்புக்களோடு சொன்னயம், பொருணயம் பொருத்தம் கூறி ஆராய்வதும், 'நம் இலக்கணம் ஏனையவைபோலல்லாது 'உயிர்', 'மெய்,' ஆகிய நமது சமயக்கொள்கைகளோடு சம்பந்தப்பட்டது' என்று விளக்குவதும், எளிய கணக்கு வழக்கு மேற்கோள்களால் அரிய இலக்கணப் பகுதிகளை, கேட்போர் உளங்கொள்ளுமாறு தெளிவு படுத்துவதும், ஆழ்ந்து படிப்போர்க்கு மேலும் ஊக்கத்தினை ஆக்குவதாய் இருக்கும். சாதாரணமாக உரையாடும் போதும், சில அரிய பெரிய கருத்துக்களை நூல்களாலும், அனுபவங்களாலும், பிற நிகழ்ச்சிகளாலும், சிறு கதைகளாலும், வரலாறுகளாலும் கூறி, உடன் இருப்போரை மகிழ்வித்துத் தாமும் மகிழ்வார்கள். தவிர, அவர்கள்பால் அன்புடைமை, தன்மானமுடைமை இணங்காத இடத்து மனத்தாலும் வணங்காமை, எந்தச் சமயத்தும் எவர்க்கும் அஞ்சாமை, தமிழும் சைவமும் செழிக்கும் நன்னோக்கமுடைமை, உள்ளே ஒன்று வைத்துப் புறத்தே வேறு ஒன்று பேசாத நேர்மையுடைமை, எந்த ஒரு கருத்தையும் நீள நினைத்துத் தீரச் சிந்தித்து ஆராய்ந்து பிறரால் அசைத்தலாகாத முறையில் முடிவு செய்தே வெளிப் படுத்தியதால்,

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து"

என்ற திருக்குறளிற்கு ஓர் எடுத்துக்காட்டாய் இருந்தமை, தமக்குத் தெரியாத ஒன்றை ஒத்துக் கொள்வது,

அது தெரிந்தமற்றவரை அறிந்து பாராட்டுவது, இல்ல புகழுதல் இல்லாமை, உள்ளவே புகழுதல் உடைமை, தமக்குக் கிழாகியும் ஒத்தும் உயர்ந்தும் இருக்கும் புலவர் களோடு காழ்ப்பின்றி ஆதரித்துப் போற்றிப் பாராட்டிக் கலந்து பழகுவது, கண்டிப்பான தன்மையுடைமை ஆகிய அரிய பண்புகள் அமைந்திருந்தன. ஸ்ரீசிவகாமசுந்தரி யார் பாகத்து ஸ்ரீநடராஜப் பெருமானை இடையறாது வழி படுபவர்கள். அநுதினமும் தவறாது சிவபூஜை செய்து வந்தார்கள். பூஜாகாலங்களில் திருமுறைப் பாடல்களை உளங்கனிந்து ஓதி உருகுவார்கள். சொற்பொழிவுகட் கிடையேயும் சிலபாடல்களைக் கலந்து பாடிக் கசிந்து உருகிக் கண்ணீர் மல்குவதும் உண்டு.

### குருதேவர்

பொதுவாக ஏழையேங்கள் பள்ளியில் பயின்றது முதலும்,சிறப்பாக மன்றம் துவங்கிய பின்னரும் அவர்கள் ஏழையேங்கள்பால் கொண்ட பேரன்பும்; பெருகருளும் 'இத்தன்மையன' என்று எழுதி வெளிப்படுத்தியமைய இயலாதனவையாகும். ஒருவாறு சுருக்கி எழுதினல் அப் பேராதரத்துப் பெருங்கருணைத்திறத்தினை, 'அவர் கள் ஏழையேங்களுடைய குருதேவர் ஆனார்கள்; அவர்கள் ஏழையேங்களுடைய உள்ளங்களிலே கோவில் கொண்டு குடி கொண்டார்கள். அவர்களுடைய திருவடி நீழலிலே உய்ந்து வாழ்ந்தோம்; வாழ்கின்றோம்; வாழ்வோம். அவர் கள் ஏழையேங்களுள்ளே கலந்தும், ஏழையேங்களைத் தம்முள் கலப்பித்தும் கொண்டார்கள். ஏழையேங்கள், ஏழையேங்களுடைய உளங்கலந்து உயிர்கலந்து உள்ளே உயிர்க்குயிராம் சிவமேயாக விளங்கி, அன்றே ஏழையேங் களை ஆண்டு கொண்டு அருள்செய்த, இன்றும் அருள் செய்கின்ற, என்றும் அருள்செய்யும் அவர்களுடைய

உடைமைகள் ஆயினேம்.' என்று குறிப்பிடலாம், சிவத் திரு. ஐயா அவர்கள், அவர்களுடைய அருமையினையும், ஏழையேங்களுடைய எளிமையினையும் பாராட்டிப் பொருட் படுத்தாது, தமது அருமையினீங்கி எளியராகி ஏழை யேங்களை எளிமை நீக்கி அரியராக்கி உய்வித்த அவர்களு டைய, ஏழையேங்களுக்கே உரிய தனிப் பெருந் திருவருளினை முப்போதும் எப்போதும் வணங்குகின் றேம். ஏழையேங்கள் நினைத்தனவற்றை யெல்லாம் அவ்வப்போது நுனித்து அறிந்து மேவுமாற்றுல் ஆவன அனைத்தையும் அவ்வப்போதே உணர்ந்து செய்து பாது காத்து வந்த அவர்களை இழந்த ஏழையேங்களுடைய உள்ளம் ஆற்றுதலை ஆற்ருததாய்த் தாங்குதலைத் தாங்காததாய், நிலைகுலைந்து அலமந்து செயலற்றதா கின்றது.

மறைவு

அவர்கள் ஏழையேங்களையும் மன்றத்தினையும் தமது உயிரை விட உயர்வாகக்கொண்டு ஓம்பி வந்தார்கள். மன்றத்தின் பதினைந்தாவது ஆண்டு நிறைவு விழாவில் பதினன்கு நாட்கள் தொடர்ந்து பேசி, பதினைந்தாவது நாள் பேச்சாகச் சண்டேச நாயனர் புராணத்தினைப்பற்றிச் 'சிறிய பெருந்தகையார்' என்ற தலைப்பில் பேசினர்கள். இதுவே அவர்களுடைய இறுதிச்சொற்பொழிவாக அமைந்தது என்பதை நினைத்து, தமிழ் கூறும் நல்லு லகம் எங்கணும் சென்று சொன்மழை பொழிந்த அவர்களுடைய முடிவுப்பேச்சு நடைபெறும் இடமாக இம்மணிவாசக மன்றம் அமைந்ததே! என்பதைச் சிந்திக்க மனம் நைந்து உருகுகின்றேம். அவர்களும் தமது வாழ்க் கையின் சொற்பொழிவுத் தொண்டைத் தாம் உயிரினும் உயரியதாகக்கொண்ட மன்றத்திலே நிறைவு செய்து

கொள்ளத்திருவுளம் பற்றினர்கள் போலும்! விழாவை முடித்துச் சென்ற அவர்கள், இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் 'இருமலோடு' கூடிய ஜுரநோய் வாய்ப்பட்டார்கள். அஃதுமுதல் நான்கைந்து மாதங்களாகத் தக்கவாறு சிகிச்சைகள் செய்யப்பட்டன. அக்கொடிய நோய் இருந்த நிலைமையில் இருப்பதும், கூடுவதும், குறைவதுமாக மாறி மாறி இருந்து வந்தது. சிறிதே குணமடைந்து, பின் மீட்டும் அதிகப்பட்டது. விளம்பி ஆண்டு பங்குனித் திங்கள் இரண்டாம் நாள் (15–3–1959) ஞாயிற்றுக் கிழமை காலை தமது நினைவு இழக்கும் நிலைமை ஏற்பட்டது. நண்பகல் 12.30 மணியளவில் ஆண்டவன் திருவருளால் அந்நிலைமை நீங்கித் தெளிவு வரப்பெற்றார்கள். திருவாசகம் படிக்கப்பட்டது. அது கேட்ட அவர்கள் 'தாமே சொல்ல வேண்டும்' என்று கூறிப் பல திருவாசக யாத்திரைப்பத்துப் பாடல்களைப்பாடி, இறுதியாக, 'கல்லாப் பிழையும் கருதாப்பிழையும்' என்ற பாடலைப் பாடி முடிக்கும் தருவாயில் ஆவிபிரிந்தது. என்செய்வோம்.

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் .........!

என்று பாடித் தொடர்ந்து 'கச்சியே' என்று எடுத்தலும் 'இனிக் கணமேனும் தாழ்த்தல் தகாது' என்று 'ஏகம்பனே' என்று அழைக்கும் முன், பாகம் பெண்ணுருவாகிய ஏகம்பத்துறை எந்தை பெருமான், விரைந்து (தம் 'கச்சி' ஊர் கூறி 'ஏகம்பர்' பெயர் கூறு முன்) ஓடோடியும் வந்து ஐயா அவர்களுடைய இன்னுயிரைக் களைப்பையும் இளைப்பையும் மாற்றித் தமது பொன்னார் திருவடி நிழலிலே சேர்ப்பித்துக் கொண்டான்.

சிவபெருமானுடைய திருவடிகளை அகத்திருத்தி, அப்பெருமானுடைய புகழையே பேசி, சிறந்த சிவபூஜையும், வாய்க்கும்போதெல்லாம் மூர்த்தி தல தெரிசனமும், தீர்த்த ஸ்நானமும் செய்து வந்ததன் பயனாக, இறுதியில் சண்டேச நாயனாரைப்பற்றிச் சொற்பொழிவாற்றி, திருவாசகப் பாசுரங்கள் பாடி, 'பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப்பிள்ளையைப் போல் ஆரும் துறக்கை அரிது அரிது' என்று பாராட்டப்பெற்ற பட்டினத்தடிகளாரின் அரிய, 'கல்லாப் பிழையும்' என்ற பாடலையும் பாடித் திரிகரணங்களும் மேலும் சிறந்தன ஆகப்பெற்று தேசமெல்லாம் புகழ்ந்தேத்தும் கச்சித் திருவேகம்பப் பரமன் விரும்பும் பங்குனி உத்திரப் பெருவிழாத் துவக்க நாள் சூரிய ஜோதிப் பெயர் தாங்கிய முதல் வாரமாகிய ஆதி வாரத்திலே, ஸ்ரீ அறுமுகப்பெருமானுக்கு ஏற்ற கார்த்திகை நக்ஷத்திரத்திலே, சஷ்டி திதியிலே சிவ பரம் பொருளின் திருவருளிற் கலந்த ஐயா அவர்களுடைய பெறுதற்கரிய பரிபக்குவப் பேரின்பப் பெரும் பேற்றினை வேறு எவரே பெறவல்லார்?

நம் ஐயா அவர்கள் சிவபதம் அடைந்த நாளே, இவர்களோடு மிகவும் நெருங்கிப் பழகியவர்களாகிய திரு. நாட்டார் அவர்களுடைய குரு பூஜை நாள் என்பதும், உணர்வால் கலந்து ஒன்றுபட்டு உயர்ந்தோர் இருவருடைய ஒருமைப்பாட்டின் சிறப்பு இத்தன்மையது என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கனவாகும்.

ஏழையேங்களை மீளா அடிமைகளாக ஏற்றருளிய ஐயா அவர்கள், சிறியேங்களுடைய மாளாப் பெரும் பிழைகள் அனைத்தையும் அவர்களுடைய கலந்த இடையறாத பெருகு அருளினாலே மீட்டும் பொறுத்து, மீட்டும் மன்னித்து, மீட்டும் ஏழையேங்களை ஆளாக்கொண்டு

காக்குமாறு அவர்களுடைய திருவடியிணைகளை ஏழையேங்களுடைய சென்னி மிசையேயும் உள்ளத்தேயும் நீங்காது இருக்கச்செய்து வணங்குவேமாக.

'கல்வி கரையில கற்பவர் நாள்சில' என்ற தொடர்களுக்கு மாறு இலக்கியமாக நம் ஐயா அவர்கள் தமிழ்க் கல்விக் கடலினைக் கரை கண்டதோடன்றி, அக்கடலின் நிலையையும் கண்டு, ஏனையோர்க்கும் காட்டி மகிழ்ந்து, மகிழ்வித்து, சில நாள்—அல்ல—பல ஆண்டுகள் சீருறச் சிறப்புறச் செம்மையுற வாழ்ந்தார்கள். இன்னும் ஒன்றிரண்டு ஆண்டுகளேனும் அவர்கள் உயிர் வாழ்ந்திருப்பின் அது அனைவர்க்கும் பெரும்பயன் விளைவிப்பதாகும். பெரிய புராணமும் இத் தென் தமிழ்த் திருநாடும் பெருந்தவம் செய்ததாகும். யாக்கை நிலையாமையை என்னென்று எண்ணுவது?

அவர்களுடைய ஆருயிர் என்றும் இறைவன் திருவடி நீழலில் இன்புற்றிருக்க அருளுமாறு அவ்விறைவனிணையடிகளை வணங்குவேமாக.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

——

## 2. திரு. ஐயா அவர்களுடைய வாழ்க்கை வரலாற்று முக்கிய நிகழ்ச்சிகள்

1887 தோற்றம்.

1906 திருமணம்.

1916 திரு. அ. ச. ஞானசம்பந்தம் M. A., அவர்கள் பிறந்தமை.

1918 திரு. இரா. கருணம்பிகையார் அவர்கள் பிறந்தமை.

1924 திருவிளையாடற்புராண உரைஎழுதத் துவங்கியது.

1927 திருவிளையாடற் புராண உரை நிறைவெய்தியது.

1928 கிழைச்சிவல்பட்டிக்குத் தலைமை ஆசிரியராகச் சென்றது.

1930 'திருச்சி மாவட்டக் கழகஆசிரியர்' ஆனது.

1937 பெருஞ்சொல் விளக்கனர்' பட்டம் பெற்றது.

1939 மலேயா சென்றது.

1942 மணிவாசக மன்றம் அமைத்தது.

1943 ஓய்வு பெற்றது.

1945 இலங்கை சென்றது.

1957 'முதுபெரும் புலவர்' பட்டம் பெற்றது.

1959 மறைவு.



உ

# 3. குரு அருள்

'செந்தமிழ்ச் செல்வர்', 'வாகீச கலாநிதி' 'வித்துவான்'
உயர்திரு. **கி. வா. ஜகந்நாதன்**, M. A., அவர்கள்,
ஆசிரியர், 'கலைமகள்', சென்னை.

---

சிவனருளைப் பெறுவதற்கா முயன்று நெஞ்சில்
திகழ்ஆர்வம் உடையவர்கள் நேரே ஈசன்
நவஅருளைப் பெறல்இயலாச் செய்கை யாகும்;
நல்லபயிர் காவிரிநீர் பாய ஓங்கும்
புவியினிடை எனினுமந்தப் பொன்னி யாறு
புதுவெள்ளம் பொங்கிவய லுக்குள் நேரே
கவியுமெனில் வயலழிந்து போகும்; நீரைக்
கால்வழியே பாய்ச்சுவதே தக்க தாகும். 1

அன்னதுபோல் சிவனருளை ஆன்மா நேரே
அடைவதனுல் நலமில்லை; ஆவ தன்றும்;
மன்னுகுரு நாதன்வழி ஞானம் பெற்று
மனமடக்கி அருள்பெறுதல் முறையாம்; என்றல்
முன்னவனை விடச்சிறந்த குருவின் மேன்மை
மொழிபவரார்? சிவன்வேறு குருவே றல்லர்
என்னுமதன் உண்மைகண்டால் குருவின் காட்சி
என்றுகிடைத் திடுமென்றே இருப்பார் நல்லோர். 2

ஒருமலத்தார்க் குள்ளொளியாய் வருவான் எம்மான்;
ஓரிரண்டு மலத்தார்க்கோ வடிவம் பெற்றுத்
திருவருள்செய் வான்;மும்மை மலத்தால் நையும்
சீவர்களாம் சகலருக்கன் னேர்போல் வேடம்
மருவியருட் குருவாகி வருவான் என்று
மாட்சிபெறு ஞானநூல் சாற்று மன்றே;
வெருவிஅர னருளெய்தல் அருமை என்று
விடல்வேண்டா; குருவருளை நாடி நிற்போம். 3

சிவனன்பிங் கில்லாமல் இருந்தும் ஆசான்
திருவடியி லன்புசெயின் அதுவே மிக்க
தவமெனலாம் ; சிவனன்புக் கிணையாம் அஃது ;
சார்ந்தகுரு இலையாகில் இறைவன் அன்பால்
பவமகல வழியில்லை ; அவ்வன் பாலே
பணிகுரவன் தனைப்பெற்றுப் பின்னர் ஞானம்
குவியும்அத னுல்குரவன் அருளால் எல்லாம்
கூடுமெனல் முக்காலும் உண்மை யன்றோ ? 4

பூமியின்கீழ் நீரெங்கும் இருக்கு மேனும்
புனல்கொள்ளும் வேட்கையுளார் கிணறு தோண்டி
ஆமளவு பறித்துநீர் மொண்டு கொள்ளும்
அதுபோலச் சிவனருளெங் கணும்இ ருந்தும்
தாம்மயலி னிருந்துமீள் வதற்கா ஏற்ற
சற்குரவன் றனைப்பணிந்து ஞானம் பெற்றுச்
சாமதுவும் பிறப்பதுவும் இல்லா வீட்டிற்
சதானந்த வாழ்வுற்றுத் திகழ லாமே. 5

——

# 4. சிவத்திரு. 'பெருஞ்சொல் விளக்கனர்' அவர்களுடைய

# அருங்கருத்துக்கள்

உயர்திரு. சொ. கிருஷ்ண பிள்ளை அவர்கள்

---

(இத் தலைப்பின் கீழ்உள்ள கருத்துக்களைத் தொகுத் தருளியவர்கள், திரிசிரபுரம் அருள் நெறித் திருக் கூட்டத் தின் செயலாளர் உயர்திரு. சொ. கிருஷ்ண பிள்ளை அவர் கள் ஆவார்கள். பல்லாற்றுலும் அளவிட இயலாத தொண்டு கள் செய்து வருகின்றவர்கள். தவருது சிவபூசை செய்யும் சைவ சீலர். இவர்கள் ஆற்றிவரும் பெரும்பணிகளால் அரு ணெறி வளர்கின்றது.

திரு. முதலியார், ஐயா அவர்கள் திருச்சியில் தங்கத் துவங் கியது முதல், அவர்கள்பால் உளம் ஒன்றிக் கலந்து நெருங்கி யிருந்தவர்கள். திரு. ஐயா அவர்கள், முதிர்ந்த நிலைமையில் தமது பேரறிவும் பெருகனுபவமும் கொண்டு, பல ஆண்டுகளாக அகன்றும், சூழ்ந்தும், ஆழ்ந்தும் முயன்று சிந்தித்துவைத் திருந்து உதிர்த்த, பழுத்துக்கனிந்த அருங்கருத்துக்களாம் இன் கனிகளைச் சுவைத்து இன்பத்தில் திளைத்த, திளைக்கின்ற பெரும்பேறு பெற்றவர்கள். ஐயா அவர்கள்பால் சில நூல் களைப் பாடமும் கேட்டவர்கள்.

தாமின்புறுவது உலகின்புறக்காணும் தயாவினுல், நாம் இன்புற, இவைகளை உதவியருளியுள்ளார்கள்.)

க. "நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க"

திருவாசகம் பாடத் தொடங்கிய மணிவாசகர் முதன் முதலில், "நமச்சிவாய வாஅழ்க நாதன்ருள் வாழ்க" என்று பாடியருளினர். இவ்வாறு எடுத்த எடுப்பிலே

திருவைந் தெழுத்தையும் திருவடியையும் வாழ்த்தியருளியதற்குக் காரணமுண்டோ? எனின், 'உண்டு' என்னலாம். பிறவிப் பெருங் கடலிலே, துன்பமென்னும் அலையால் மோதுண்டு கிடந்த மணிவாசகருக்கு, அக் கடலினுள் மூழ்காதிருக்கும் பொருட்டுப் புணையாகக் கிடைத்தது திருவைந்தெழுத்தே. மூழ்காதிருந்தால் மட்டும் போதாது; கரை ஏறுவதற்கு ஓர் துறையும் வேண்டுமல்லவா? எனவே நன்றியறிவின் காரணமாகத் திருவைந்தெழுத்தையும் திருவடியையும் முதன் முதலில் கூறினர் என்க. இது "தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்து" என்று தொடங்கும் அவர் பாடலாலே இனிது விளங்கும். துன்ப நீக்கத்தையும், இன்ப ஆக்கத்தையும் ஒருசேரப் போதிப்பது சைவசமயமே. இது சைவத்தின் சிறப்பியல்புகளில் ஒன்று. பிறவிக் கடலில் அழுந்தாதிருக்கும் பொருட்டுப் புணையாகக் கிடைத்தது துன்ப நீக்கத்தின் பாற்பட்டது. இறைவன் திருவடி பெற்றது இன்ப ஆக்கத்தின் பாற்பட்டது.

இனி முதலடிக்குப் பொருள் கூறுதும்: 'நமஸ்சிவாய' என்ற வடமொழி 'நமச்சிவாய' என்று தமிழில் வந்தது. 'நம:' என்ற வடமொழிச் சொற்கு, 'வணக்கம்' என்பது பொருள். "சிவாய" என்பதிலுள்ள 'ய' வடமொழி இலக்கணப்படி நான்காம் வேற்றுமை உருபாகும். எனவே 'சிவாய' என்ருல் 'சிவனுக்கு' என்பது பொருள். 'நமச் சிவாய' என்ருல் 'வணக்கம் சிவனுக்கு' என்பது பொருள். இது 'தூலபஞ்சாக்கரம்' எனப்படும். 'வணக்கம் சிவனுக்கு' என்று சொல்லும் போழ்து 'நான் வணங்குகிறேன்' என்ற முனைப்பு ஏற்பட்டுக் கூறுவதால், அது தூலமாயிற்று. அவ்வாறு கூருது 'சிவாய நம' எனக் கூறும் போழ்து 'சிவனுக்கு வணக்கம்' என்று சிவனை முதற்கண் வைப்பதால் அது சூக்குமபஞ்சாக்கரம் என்று

பேசப்படும். இனி 'அதி சூக்கும பஞ்சாக்கரம்' என்பதும் ஒன்று உண்டு. அது 'சிவாய சிவ' என்பதாகும். இவ்வாறு ஏனையோரெல்லாம் பொருள் கூற, சைவ சித்தாந்த மரபின்படி, இத் திருவைந்தெழுத்தின் ஒவ்வோர் எழுத்திற்கும் பொருள் கூறப்பெறும். "எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாம்" என்றபடி, ஒவ்வோர் எழுத்தும் ஒரு பதமாம். இதனால் திருவைந்தெழுத்து 'ஐந்து பதம்' என்று பேசப்படுகிறது. "அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம் சொல்லி" என்பது சுந்தர மூர்த்திகள் வாக்கு. திருவைந்தெழுத்தில் (சிவாயநம) 'சி' சிவனையும், 'வ, அருளையும், 'ய' ஆன்மாவையும், 'ந' திரோதமலத்தையும், 'ம' ஆணவ மலத்தையும் குறித்து நிற்பன. இதனை,

"சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்
அவன் எழுத்து அஞ்சின் அடை வாம்"

என்ற உண்மை விளக்கத்தாலும்,

"சிவன் அருள் ஆய சிவன் திருநாமம்
சிவன் அருள் ஆன்மாத் திரோதம் மலம் மாயை"

என்ற திருமந்திரத்தாலும் அறியலாம். யகரமாகிய உயிர், நகர மகரத்தை நோக்கி நிற்கின்றது. அவ்வுயிர் பலகாலம் திருவைந்தெழுத்து ஓத மலமாயா கன்மங்களாகிய நகர, மகரமற்று, வகரமாகிய அருளில் படிந்து, அதன் துணை கொண்டு சிவத்தை அடையும். இதுதான் திருவைந்தெழுத்தின் உட்கிடக்கை. இக்கருத்தை முற்றத்துறந்த பட்டினத்தடிகள்,

"மாயநட் டோரையும், மாயா மலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயு மதேநிட்டை என்றான், எழிற்கச்சி ஏகம்பனே."

என்ற திருப்பாடலில் நன்கு விளக்கியுள்ளார்.

'நாதன்றாள்வாழ்க'-நாத தத்துவத்தின்கண்விளங்கு வோன்றன் திருவடி வாழ்வதாக.

'நாதம்' எனினும் 'ஓசை' எனினும் ஒன்றே. ஓசை புலப்படுந் தன்மை, புலப்படாத தன்மை என இருவகைப் படும். புலப்படாத தன்மைக்கு 'விந்து' எனவும், புலப் பட்ட ஓசைக்கு 'நாதம்' எனவும் பெயர் கூறப்பெறும். 'விந்து', மாயையில் திருவருட் சக்தி தோய்ந்து அதனைக் கலக்க, அதனினின்றும் 'நாதம்' ஏற்பட, அது அசுத்த மாயையை இயக்குகின்றது. அவ்வசுத்த மாயை, பிர கிருதி மாயையை, அதாவது பஞ்சபூதங்களாகிய இவ்வுல கத்தைத் தோற்றுவிக்கின்றது.

எனவே, இவ்வுலகம் தோன்றுவதற்குக் காரணமாய்த் திகழும் நாதத்தில், திருவருட் சத்தியும், அச்சத்தியோடு உடனாய் நிற்கும் சிவமும் கலந்து விளங்கும். ஆதலால் இறைவனை இங்கு 'நாதன்' என்றார். 'நாதன்' என்ற வட சொல், தலைவன் எனவும் ஓசை எனவும் இரு பொருள் படுமாதலின், அது தமிழிற் பொதுப்பட நின்று எல்லா ஓசைகட்கும் முதலாய நாதத்தினுள் விளங்கு வோன் என்றும், எல்லாவற்றிற்கும் தலைவன் என்றும் இரு பொருளையும் உணர்த்தியது. ('திருவடி' சிவபுரா ணத்தில் மட்டும் இருபத்தோரிடங்களில் கூறப் பெறு கின்றது.) அவ்வாறு திருவடியில் மிகப் பற்றுக்கொண்டு பலவிடங்களில் பாடியது யாது காரணம்பற்றி யெனின், திருவருளே அத்திருவடியாதலான் என்க.

உ. **வாழ்தல், இருத்தல்:—**

நாம் வாழ்கின்றோமா? உலகத்தில் பிறந்து உயிரோடு உலவித்திரிவதனால் நாம் வாழ்கின்றதாகாது. மனைவி மக்களோடு சுகபோகமாக இருப்பதே வாழ்க்கை என்று

சிலர் ஏமாந்திருக்கின்றனர். இதுவே வாழ்தல் என்று இருப்பின், நமக்கும் ஆறறிவு பெருத விலங்கினங்களுக்கும் என்ன வேறுபாடு? இதுவும் வாழ்தல் என்பதாகாது. "வாழ்கின்ருய்? வாழாத நெஞ்சமே!" என்று மணிவாசகர் பேசுகின்ருர். நெஞ்சம் வாழ்வதற்குரிய துறையில் நிற்கவில்லை. எனவே வாழவில்லை' என்று குறிப்பிடுகின்ருர். 'வாழ்கின்ருய்' என்பதற்கு 'வாழவில்லை' என்பது பொருள். இது சிந்தனைக்குரியது.

மனிதர்களை வாழ்கின்றவர்கள், இருக்கின்றவர்கள் என்று இருவகையினராகப பிரிக்கலாம். வாழ்தல் வேறு. இருத்தல் வேறு. வாழ்தல் என்பதில் இருத்தல் அமையும். ஆனல், இருத்தலில் வாழ்தல் அமையாது. எப்படி? வாழ்கின்றவர்கள் எல்லோரும் இருக்கின்ருர்கள், என்பது உறுதி. ஆனல், இருக்கின்றவர்கள் எல்லோரும் வாழ்கின்ருர்களா? எனில், 'இல்லை' என்றுதான் கூறவேண்டும்.

ஆண்டவன் இந்த அரிய உடலை ஓர் கருவியாகத் தந்துள்ளான். 'கருவி' எனவே அது ஓர் காரியத்தை முடிப்பதற்குரியது என்பது சொல்லாமலே விளங்கும். எக்காரியத்தை முடிப்பதற்கு? நாம் பிறவியாகிய கடலில் ஆழ்ந்து கிடக்கின்ரேம். அவ்வாறு ஆழாது கரை சேர ஆண்டவன் திருவடியைப்பற்றவேண்டும். வல்வினைப் பட்டு பிறவிக் கடலில் ஆழ்கின்ற நாம் அவ்வாறு ஆழாமற்காப்பானை ஏத்தவேண்டும். "பிறவிப்பெருங் கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்'" என்பது வள்ளுவர் வாக்கு. எனவே பிறவிக்கடலினின்றும் ஆழாது கரையேற இறைவனடி சேரவேண்டும். அதற்கென்றே கொடுக்கப்பெற்ற கருவிதான் நமது உடல். அதற்குரிய துறையில் நாம் என்று நடக்கின்ருேமோ

அன்றுதான் வாழ்ந்ததாகும். அதனை மறந்து மின்னனைய பொய்யுடலை மெய்யென்று, மின்னார்கள் இன்பமே இன்ப மென்று, உலவித்திரியும் வரை நாம் பிறவிக்கடலுள் ஆழ்ந்து கொண்டே இருப்போம். எனவே, உலகத்தில் இருக்கின்றவர்கள் எல்லாம் வாழ்கின்றார்கள் என்பதாகாது. எவர்கள் தமது பிறவியின் குறிக்கோளை நினைந்து அதற்குரிய துறையில் வாழ்கின்றார்களோ அவர்களே வாழ்கின்றவர்கள் ஆவார்கள்; ஏனையவர்கள் இருக்கின்றவர்களே.

"புள்ளுங் கமலமும் கைக்கொண்டார் தாமிருவர்
உள்ளு மிவன்பெருமை ஒப்பளக்கும் தன்மையதே
அள்ளல் விளைகழனி யாமாத்தூ ரம்மான்எம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே!"

என்று திருஞானசம்பந்தர் பாடுகின்றார். கழல் பரவா வாழ்க்கை வாழ்க்கையன்று என்பது பொருள். இதனை நன்குணர்ந்து அவனடி பரவி வாழ்வாங்கு வாழ்வோமாக. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய:—

"கடிமதிக்கண்ணியினானை...வாய் வேண்டுவ சொல்லி வாழ்வேன்"
(திருவையாறு)

"காமனை...வாமனை நினைந்த நெஞ்சம் வாழ்வுற நினைந்தவாறே."
(திருநெய்த்தானம்)

"கோடி...நாடி வாழ் நெஞ்சமே நீ நன்னெறி யாகுமன்றே."
(திருவிராமேச்சுரம்)

"வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்...செல்வமே."
(திருக்கோழம்பம்)

"ஒரு பிறப்பிலான்...அரும்பிறப்பை அறுப்பிக்கு மதிகையூரான்
அம்மான்தன் இணையடியை அணைந்து வாழாது
இருபிறப்பும் வெருவி யராயிருந்தார் சொற் கேட் டேழை
யேனுன் பண்டி கழ்ந்தவாறே" (திருவதிகை வீரட்டானம்)

என்ற தேவாரப், பாடல்களும் 'வாழ்வு' என்பதன் பொருளை விளக்குவதும் இங்குச் சிந்தித்தற்குரியது.

### ரு. பிறப்பு துன்பமா? இன்பமா?

பிறப்பு துன்பமென்று பெரு நூல்கள் பேசுகின்றன. "அல்லற் பிறவி" என்பார் மணிவாசகர். "பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்" என்று மணிமேகலை பகரும். உலகப் பொதுமறை தந்த வள்ளுவ தேவநாயனார் 'மாணுப் பிறப்பு' என்று கூறுவார். மாணுப் பிறப்பு என்றதற்கு உரை கூறவந்த பரிமேலழகர், 'இன்பமில்லாத பிறப்பு' என்று பொருள் கூறியதுடன், நரகர், தேவர், விலங்கு, மக்கள் என்னும் நால்வகைப் பிறப்பினும் உள் ழுந்து துன்பமே யாகலின் மாணுப் பிறப்பு என்றார்" என்று அதற்கு விளக்கமும் தந்துள்ளார். இதனல் பிறப்பு துன்பமேதானு?

மண்ணிலே தோன்றும்படி பணித்தருளப்பட்டதும், மையல் மானுடப் பிறப்பை எண்ணி மயங்கினர் சுந்தரமூர்த்திகள். ஆனல். மண்ணிலே வந்து பிறந்தருளிய பின்னர், தில்லையில் திருநடம் புரியும் எம்பெருமான் திருக்கூத்துக் கும்பிடப் பெற்றதும், "மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பமாம்" என்று கூறியருளினர். இங்ஙனமே, "என்னை வகுத்திலையேல் இடும்பைக்கு இடம்யாது சொல்லே" என்றெல்லாம் பிறப்பின் தொல்லையை நினைந்து பாடிய நாவுக்கரசரும், "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்று பாடியுள்ளார். இது முன்னுக்குப் பின் முரணுகக் கூறியது என்று கொள்ளற்க. எப்பொழுது அப்பிறவி வேண்டப்படுகிறது என்பது சிந்திக்கத் தக்கது.

"குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்,
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்,
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்,
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே."

என்பது அவரது திருப்பாட்டு.

இன்னும், "இன்னம் பார்லிக்குமோ இப்பிறவியே" என்றும், "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்றும் பாடியுள்ளார். இதனால் நாம் அறியக்கிடப்பது யாது? பிறவியாகிய கருவி எதற்காக இறைவனால் கொடுக்கப் பெற்றதோ அதற்காக அது பயன்படும் போழ்து அது இன்பமாகப் போற்றப்படுவதையும், அதற்கு மாறான செயலில் பயன்படும்போழ்து அது துன்பமாகத் தூற்றப்படுவதையும் ஆன்றோர்கள் வாயிலாக அறிகின்றோம். பிறவி பெற்றதன் பெரும்பயன் இறைவன் திருவடித் தொண்டு புரிதலே என்பது,

"மானிடப் பிறவிதானும் வகுத்தது மன வாக்கு காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காகவன்றே"

என்ற சித்தியார் வாக்காலும்,

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ

என்ற சேக்கிழார் வாக்காலும் இனிது புலப்படும்.

வரகுண பாண்டியன் என்ற அரசன் இறைவனுடைய திருவருளின் வயப்பட்டு, "எங்கும் சிவமொழிய இல்லை அவன்றன் ஆணை" "பார்க்குமிடமெல்லாம் பரமன் காண் அம்மானை" என்ற அனுபவ நிலையில், திருவிடைமருதூரில் வசிக்குங்கால், அவரால் நிகழ்த்தப் பெற்ற பக்திச் செயல்கள் பலவுள. அவற்றுள் ஒன்றினை இங்கு

நினைவு கூர்தல் பொருந்தும். ஒருநாள் அவர் மகாலிங்கப் பெருமானை வணங்குவதற்குச் செல்லுங்காலை திருமஞ் சனத்திற்காக ஆட்டும் பொருட்டுக் காய வைத்திருந்த எள்ளைக், காவல்காரன் ஒருவன் அள்ளித் தின்று கொண் டிருப்பதைக் கண்டார். பக்தராய இவரது மனம் இதைக் கண்டு பொறுக்க வில்லை. எனவே இவர் விரைந்து சென்று, அவனை, "ஏன் இவ்வாறு செய்தாய்? என்று வினவ, அவன், அரசே! இங்கே மீண்டும் பிறந்து இப் பெருமானுக்குத் தொண்டு செய்யும் பொருட்டே இவ் வாறு செய்தேன்," என்று மொழிதலும், அரசன், "அப்படியானால் அந்த எள்ளில் எனக்கும் கொஞ்சம் கொடு" என்று சொல்லி அவனது எச்சில் எள்ளையே பறித்துத்தின்றார் என்பது வரலாறு. இங்குப் பகுத் தறிவு கொண்டு பார்க்க வேண்டுவதில்லை. பக்தியின் முதிர்ச்சியில் பகுத்தறிவு செல்லாது என்பதை இத் தகைய சிறந்த அடியார்கள் மூலம் அறியலாம். விதி மார்க்கம், பக்தி மார்க்கம் என்று இரு வகை உண்டு. கண்ணப்பர், இயற்பகையார், இங்குப் பேசிய பாண்டிய அரசர் இவர்கள் கொண்டது பக்தி மார்க்கம். எனவே இங்குப் பகுத்தறிவு கொண்டு காணற்க. ஆண்டவனுக் குத்தொண்டு செய்வதற் கென்று கிடைக்குமானால், அப் பிறவியைப் பாண்டியன் எவ்வாறு விரும்பி ஏற்கிறான் என்பதை மட்டும் காண வேண்டும்.

எனவே, பிறப்புத் துன்பமெனினும், அப்பிறப்பும் இறைவன் திருவடிக்கு அன்பு செலுத்தப் பயன்படு மானால், அதுவே இன்பமுமாகும் என்பதை உணர்க.

## ௪. மெய்ப்பொருள்

மெய்ப்பொருள் என்பது பண்புத்தொகை நிலைத் தொடர் ஆகும். மெய்யாகிய பொருள் எனப் பொருள்

விரியும். மெய்யாகிய பொருள் என்பது, பொருள்போலக் காணப்பட்டு உள்ளீடின்றி அழிதன் மாலேயவாகிய ஏனைப் பொருள்கள் போலாது, எங்கும நிறைந்து, எக்காலத்தும், எவ்வாற்ருனும் அழியாததாய்த், தூய்தாய், எல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற்பொருளே. மெய்ப்பொருள் என்பது உள்ளது—செம்பொருள் என விரிந்து, கடவுளேக் குறிப்பதாகும்.

### ரு. சமய பேதங்கள்

அறிவு விளக்கம் பெற்றவர்கள் தமது வாழ்நாளில் தமது உள்ளத்தில் எழும் நான் யார்? என்னேச் சூழ்ந்துள்ள உலகம் எத்தகையது? உலகைப் படைத்து என்னே உலகில் வாழவிட்டவர் எவர்? என்பவை முதலான வினுக்களுக்கு அவ்வச் சமயத்தில் தமது அறிவால் ஆய்ந்தறிந்த விடைகளே அறிந்தவாறே வெளியிட்டுச் சென்ருர்கள். அவ்வாறு வெளியிடப்பட்ட விடைகளாம் கொள்கைகள் அடங்கியதே சமயமாம். காலத்தாலும், அறிவாலும் சமய பேதங்களும், சமய வளர்ச்சியும் ஏற்படலாயின. குருடர் நால்வர் தனித்தனியே யானே கண்ட கதை அவைகளே விளக்குவதாகும்.

### சா. சைவம்

'சைவம்' என்பது, 'புலாலுண்ணுமை' என்று சிலர் கருதுகின்றனர். புலாலுண்ணுமையும் சைவக்கொள்கைகளுள் தலேயாயது ஒன்றே. ஆனுல் புலாலுண்ணுத ஒரு கொள்கை மட்டும் சைவமாகாது. 'கற்பு' என்பது பிறர் நெஞ்சு புகாமை என்ற சிறப்புக் குணம் உடையதாதலோடு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகியவும் பிறவும் போன்ற பொதுக் குணங்களுடையதாதலேயும்

பொருளாகக் கொண்டுள்ளது போல், 'சைவம்' என்பது புலாலுண்ணுமையை உடம்பாகவும், அன்புடைமை, அருளுடைமை, சத்சங்கமுடைமை, இறை வழிபாடு ஆகியவைகளை உறுப்புக்களாகவும் கொண்ட முழு உருவம்போன்றது என்று பொருள் படுவதாகும். சிவ சம்பந்தம் உடையது சைவம்.

## எ. சச்சிதானந்தம்

சச்சிதானந்தம். சத்து+சித்து+ஆனந்தம். சத்து —அழியாமலிருப்பது. சித்து—அறிவோடு இருப்பது, ஆனந்தம்—இன்பமாக இருப்பது. அழியாமல் அறிவோடு இன்பமாக இருப்பதையே நாம் அனைவரும் விரும்புகின்றோம். உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் இம்மூன்றன் உருவமாக இறைவன்விளங்குகிறான் என்றும், பரஞ்சோதியார் கூறுகிறார். அவ்விறைவனை வணங்கி மூன்றும் பெற்று வாழ்வோமாக.

## அ. சத்தியம்

'சத்தியம்' என்ற சொல்லாற்பெறப்படும் பொருள்களைத் தமிழர் உண்மை, வாய்மை, மெய்மை என்ற மூன்று சிறந்த சொற்களாலே குறிப்பிட்டனர். அவை உள்ளத்தின் தன்மை, வாயின் தன்மை, மெய்யின் தன்மை என்ற பொருளுடையன. அவ்வாறு குறிப்பிட்டதன் உட்கிடையாகிய உயர்ந்த உயிர்ப்பொருள் யாதெனில், 'தூய்மையான நல்லனவே நினைத்து, நல்லனவே பேசி, நல்லனவே செய்ய வேண்டும் என்பதுதான் பூரணமான சத்தியமாகும். மூன்றில் ஒன்று மாறுபடினும் அது சத்தியமாகாது. என்பதுவே.

## கூ. ஓர் திருமந்திரம்

'கல்லைக்கண்டால் நாயைக் காணோம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம்' இவை பள்ளிச் சிறுவர் முதல் பெரியவர் வரை கூறும் தொடர்களாகும். அடித்தற்கு ஏற்ப இரண்டும் ஏக காலத்தில் காணப்படவில்லையே,' எனச் சிறுவரும், 'ஒன்றோடு ஒன்று இரண்டும் பொருத்தமாகக் கை கூடவில்லையே' எனப் பெரியவரும், வருந்தும் நிலைமையில் இத்தொடர்கள் எழுகின்றன. ஆனால் இவை பெரியதொரு தத்துவப் பொருளை உட்கொண்டவை. அது, "பாம்பாகக் கண்டபோது பழுதையும், பின் பழுதை என்று கண்டபோது பாம்பும் தோற்றாதது போல், எல்லாம் 'இறைவன்' என்று காண்பவர்க்கு உலகமும், 'உலகம்' என்று காண்பவர்க்கு இறைவனும் காணப்படுதல் இல்லை" என்பதாகும். இதனைத் திருமூலர்,

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே."

என்றருளிய பாடலாலும் அறியலாம்.

## கo. வாய்க்குற்றம்

குற்றங்கள் மனத்தினால் செய்யப்படுபவை, வாயினால் செய்யப்படுபவை, உடம்பினால் செய்யப்படுபவை என முத்திறப்படும். வாய்க்குற்றம் ஐந்து. அவை பொய், குறளை, கோள், கடுஞ்சொல், பயனில் சொல் என்பனவாம். இவற்றுள் இரு தலையினவற்றிற்கும் நடுநாயகமாய் விளங்கும் கோளே மிகவும் கொடுமை செய்வதாகும். பாம்பு தான் கடித்த உடலையே துன்புற்று உயிர் நீங்கச்

செய்யும். ஆனால் கோள் ஒருவர்பால் சொல்லப்படும். அதனால் துன்புறுவோர் மற்றொருவராக இருப்பார். அல்லது வேறொருவராக இருப்பார். விஷத்தினும் விஷமமும், தீங்கும் செய்யவல்லது கோள் ஆகும். ஆதலால், அது எவரிடமுமே இல்லாது ஒழிவதாக.

### கக. தமிழ்ப் பாட்டுக்கள்

தமிழ்ப் பாட்டுக்களை முற்காலத்தவை பிற்காலத்தவை என்று இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முன்னதற்கு மாதுளம் பழத்தினையும், பின்னதற்கு முந்திரிப் பழத்தினையும் உவமையாகக் கூறலாம். அக்காலத்தவை பொருள் செய்வதற்கு அரியவையாக இருப்பினும், சிந்தித்துப் பொருள் காணில் தொடர்தொறும், சொற்றொறும், எழுத்துத்தொறும் இன்பம் பயக்கும் நன்னயம் பல பொதிந்து நிறைந்து இருக்கும். இக்காலத்தவையுள் பெரும்பான்மையானவை பார்த்த அளவில் எளியனவாய்ப் பொருளை வெளியே காட்டிக்கொண்டு வெறும் சொல் வரிசைகளாகவும், அடுக்குக்களாகவும் இருக்கும். இன்னும் சில, புகை வண்டிகளில், "தண்ணீரைச் சேதம் செய்யாதீர்கள்" என்று எச்சரிக்கை எழுதப்பட்டு இருக்கும் இடத்தில், தண்ணீரே கிடைக்கப்பெருததாக இருப்பதுபோல், சொற்கள் இருந்து பொருள் இல்லாது, உள்ளீடில்லாதனவாகவே இருக்கும்.

### கஉ. இலக்கணம் முக்கியமானது என்பதும் அது அனுபவத்தால் பயிலவும் ஏற்றது என்பதும்

இலக்கணம் இலக்கியம் இரண்டும் ஒரு மொழிக்கு உயிரும் உடம்பும் போன்றவை. இலக்கணப்படிப்பின் முக்கியத்துவம் குறைந்து வருகின்றது. ஒரு மொழியை வரையறை செய்வது, பெருமைப் படுத்துவது, சொற்

களின் உண்மைப் பொருள்கள் காணத் துணை செய்வது, வளரச்செய்வது அம்மொழியின் இலக்கணமே. இலக்கணம் சிறந்ததாக அமையப் பெறாத ஒரு மொழி, வளமுடைய தாக நீடித்து வழங்கப்படுவதாக இருத்தல் இயலாது. பெரியதோர் நீர் நிலையை அதன் கரை காப்பது போல், பரந்ததோர் பெருமொழியினை அதன் இலக்கணம் காத்து நலம் பெறச்செய்யவல்லது. ஆதலால் அவ்வம்மொழி யினர், இலக்கியங்களோடு இலக்கணங்களையும் போற்றிப் பயில்வார்களாக.

இலக்கணப் பயிற்சி சற்றே இன்னல் தருவதாய் இருக்கும். எனினும் கூர்ந்து நோக்கினால், அது சாதாரணமாகச் சூழ்நிலை அனுபவ சம்பவங்களாலும் கூட அறியப் பெறுதற்கேற்றதாகும்.

தம்பி எழுவாய்; நீ பயனிலை. இவைகளால் எழு வாய் ஆதியனவும்,

சுடுசோறு, தோய்தயிறு, ஊறுகாய்—இவைகள்ால் வினைத்தொகைகளும், உள்ளத்தில் கொண்டு நினைவு கூர்தற்கு ஏற்ப எளிமையுடைய னவாகவும், மகிழ்ச்சி தரக் கூடியனவாகவும் இருப்பதும், இவை போல்வன பிறவும் சிந்தித்து அறிந்து கொள்க.

### கரு. திருமுறை—அற்புதத் தேவாரப் பதிகங்கள் ஓதுவது

திருமுறை ஆசிரியர்கள் அனைவரும் ஆண்டவ னுடைய அருளுக்குப் பாத்திரமானவர்கள். அவர் களுடைய அருட் பாடல்களால், இறைவன் பொருள் சேர் புகழ்களை அறியலாம். அவை, படிப்போரைத் திருவரு ணெறியில் செலுத்துவிக்கும். அவைகளுள், நால் வருடைய பாடல்களும் தனிச் சிறப்புடையன. தலங்கள் தோறும் பொதுவாகப் பாடப்பட்ட அவற்றுள்ளும் சில

தலங்களில் சிறப்பாக ஆண்டவன் அருள் வெளிப்பட்ட அற்புதங்கள் நிகழுமாறு, அற்புதங்கள் நிகழும் போதே, அற்புதங்கள் நிகழ்ந்தவுடன் பாடப்பட்ட திருப்பதிகங்களின் திருப்பாட்டுக்கள் மிக மிக மேலானவை. அவைகளைப் பொருள் உணர்ந்து சொல்லுவோர், திருக்கடைக் காப்புப் பாடல்களில் கூறப்படும் பயன்களைப் பெறுவார்கள் என்பது உறுதி. ("அவ்வாறு பலர் பயன் பெற்றமையினைக் கேட்டதும் கண்டதும் உண்டு' என்றும், தாமே "இடரினும் தளரினும்" என்ற திரு ஞான சம்பந்தருடைய திருவாவடுதுறைப் பதிகங்களைப் பாடி நலம் பெற்றதாகவும் நம் ஐயா அவர்கள் கூறுவார்கள்.)

சாதாரணமாக வயிற்று வலியுடையோர் சிலர், திருநாவுக்கரசு சுவாமிகளுடைய சூலை தவிர்த்த "கூற்றாயினவாறு" பதிகம் பாராயணம் செய்து அவ்வலி நீங்கப் பெறுவதும், குளிர் சுரம் உடையோர் சிலர், திருஞான சம்பந்தருடைய "அவ்வினைக் கிவ்வினை" பதிகத்தால் அது நீங்கப்பெறுவதும், வெளியே புறப்படுவோர் சிலர் நாளும் கோளும் நலஞ்செய்யுமாறு, "வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்" பாடிச் செல்வதும் வழக்கமாய் இருக்கின்றது.

## கசு. எது இன்பம்?

உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தும் இன்பத்தையே நாடிச் செல்கின்றன. அதனினும் மக்கட் பிறவியைப் பெற்ற நாம் இன்பத்தையடையக் கருதிப் பல துறைகளிலும் முயன்று வருகின்றோம். ஆனால், எது இன்பம்? என்றுதான் அறுதியிட்டுக்கூற இயலாததாய் இருக்கின்றது. வயிறார உண்பது, உடலார உடுப்பது, வாயாரப் பேசுவது, கண்ணாரக் காண்பது, மூக்கினால் நறுமணத்தினை முகருவது, காதாரக் கேட்பது, ஆகிய

இவற்றை இன்பமாகக் கருதிவருகின்றேம். சுருங்கக் கூறின் ஐம்புல இன்பங்களே இன்பமாக நினைந்து வருகின்றேம். ஆனல், இவையேதாம் இன்பமா?

இவைகளும் இன்பந்தான்; ஆனல் நிலையற்றன. தோன்றிமறையுமியல்புடையன. தெவிட்டும் தன்மையுடையன. முதலில் இன்பமாய் முடிவில் துன்பமாய் முடிவன. பெரும்பகுதி தனித்ததொரு இன்பமன்று; துன்பங்கலந்த இன்பமேயாம். "இன்போரணுவாம்; இடர் அதற்கு மாமலையாம்" என்று இன்பத்தைவிடத் துன்பமே பெரும்பகுதி எனக் கூறுவதுமுண்டு. "இறைகளோடிசைந்த இன்பம்," என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இதனைத் தமது தேவாரத்தில் குறிப்பிடுகின்றார். (இறை—துன்பம்). எனவே, நிலையற்றதாய்க் காலந்தோறும் மாறுபடுமியல்புடையதாய்த் தெவிட்டும் தன்மையதாய்த் துன்பங்கலந்ததோர் இன்பமே நாம் நுகரும் இவ்வுலகியல் இன்பம். ஆனல், எக்காலத்தும் எல்லோருக்கும், அனுபவிக்குந்தோறும் தெவிட்டாததாய் என்றும் மாருததாய் இருப்பது எதுவோ அதுவேதான் மெய்யின்ப மெனப்படும். அதுவே முடிந்த இன்பம். ஆராத இன்பம். உலப்பிலா இன்பம் என்னலாம். அது எது? அதுதான் இறைவன் திருவடி இன்பம். "இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே" என்று அறுதியிட்டுக் கூறுகின்றார் ஞானசம்பந்தப் பெருமான்.

மணிவாசகப் பெருமானர் அரசவண்டை நோக்கிக் கூறுவது,

"வண்டே! நீ, மிகவும் சிறிதளவாகிய மலர்த் தேனையுண்ணுது, நினைக்குந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும் எக்காலத்தும் எல்லா வலிய எலும்புகளும் உருகும்படி இன்பத் தேனைப் பொழிகின்ற கூத்தப்

பிரானிடத்தே சென்றூதுவாயாக" என்பது. இவ்வாறு அரசவண்டை நோக்கிக் கூறுமுகமாக நமக்குச் சில அறவுரைகள் தந்தருளுகின்ருர். சிறிதளவாகிய தேனைப் பருக மலர்களை நாடிச் செல்கின்றன வண்டுகள்; நாமும் அத்துணை அற்ப இன்பத்தை, அதுவும் துன்பங்கலந்த இன்பத்தை நாடியே செல்கின்ேறும். வண்டினத்திற்கு அவ்வியல்பு சாலும்; ஆனல், பகுத்தறிவு வாய்க்கப் பெற்ற நாமும் உழன்ருல் அவைகளுக்கும் நமக்கும் என்ன வேற்றுமை? உலகியலில் நுகரும் இன்பமனைத்தும் நிலையற்றன; அற்பமானவை; துன்பங்கலந்தவையுங் கூட. ஆனல், அதனினும் மேம்பட்ட தோர்அளவிலா இன்பம், ஆராத இன்பம் ஒன்று உண்டெனில், அதனையடைவதன்ேறு நமது தலையாய கடமையாகும். எனவே "அதனை நீ சென்றடைவாய்," என்று அறிவுறுத்துகின்ருர். மணிவாசகருடைய இக் கருத்துப் பொதிந்த திருவாசகத்திருப்பாடலை நோக்குக.

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணுதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

ஆண்டவன் இன்பமயமாக விருக்கின்ருன். உண்மைமயமான இன்பமாக—அறிவு மயமான இன்பமாக இருக்கின்ருன். சச்சிதானந்த சொரூபன் என்று அவனது சொரூப இலக்கணம் பேசப்படுகின்றது. "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே" எனவும் "அளவிலா மாளா இன்பமா கடலே" எனவும் மணிவாசகர் பாடுகின்ருர். கனியினும், கட்டிபட்டகரும்பினும், பனிமலர்க் குழற் பாவை நல்லாரினும், தனிமுடி கவித்தாளும் அரசினும் இனியன்" என்றும், "இன்பன்காண் துன்பங்களில்லாதான காண்" என்றும் நாவுக்கரசரும் நவின்

றருளியுள்ளார். நாம் எதனை யடைய வேண்டுமோ அதனை யுடையானிடம் சென்றாலன்றி அதனைப் பெறுதல் இயலாது. பொருள் வேண்டுமெனில் அதனையுடைய செல்வனிடமே செல்லுதல் வேண்டும். செல்வம் இல்லாதவன் அதனை எவ்வாறு வழங்குதல் கூடும்? எனவே, இன்பமடையக் கருதின் இன்பப் பொருளாம் இறைவனை அடைந்தாலன்றி அதனைப் பெற இயலாது.

ஆராத இன்பத்தை, உலப்பிலா இன்பத்தை அருள வல்லவன் இறைவன் ஒருவனே. "ஆராத இன்பம் அருளுமலை போற்றி" எனவும் "உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த செல்வமே!" எனவும் திருவாசகம் பேசுகின்றது. எனவே, அப்பெருமானை அடைதலே முடிந்த இன்பம் பெற்றதாகும் என்று கூறவும் வேண்டுமோ?

எது இன்பம்? எது துன்பம்? என்பதற்கு விடையளிப்பது போன்று :—

"துன்பம் நும்மைத் தொழாத நாட்கள்
இன்பம் நும்மை ஏத்து நாட்கள்"

என்று நாவுக்கரசரும் பாடியருளியுள்ளார். இறைவன் திருவடி இன்பம் பெறுதலே மானிடப் பிறவியின் குறிக்கோள் என்பது, முந்தையோர் முடிவு. அக் குறிக்கோளை அடையக்கருதி முயன்ற நாளெல்லாம் இன்ப நாள். இதனாலன்றே. அவ்வாறு முயலுமுகமாக, அவன் புகழைப் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்றும்,

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்தநாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்தநாளும் குறிக்கோ ளிலாதுகெட்டேன்."

என்றும் அப்பர் சுவாமிகள் பாடியருளினார்கள்.

எனவே, இதுகாறும் கூறியவற்றால்,முடிந்த இன்பம் 'திருவடி இன்பமே' என்பது பெறப்படும். அதனைப்

பெறுவதே அருமையாய்க் கிடைத்த இப்பிறவியின் குறிக்கோள். அதனையடையக் கருதின், அடையும் வழியினைச் சொல்கின்றார் நமது அப்பரடிகள். "துன்பமின்றித் துயரின்றி என்றும் நீர்—இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்" என்பதுதான் அவரது வாக்கு. அதனைப் பின்பற்றினால், "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்னும் இறுமாப்புடன் வாழலாமென்பது ஒருதலை. அவ்வழியிற் செல்ல முயன்று, பேரின்ப வடிவினனான இறைவன் திருவருளைப் பெறுவோமாக!

**கரு. 'நீதி', 'அறம்'**

நீதி—நியாயம், மெய். அறம்–தருமம். நீதி வேறு; அறம் வேறு. மெய்ப்பொருள் நாயனார் நாட்டினைக்காத்து அரசாண்டசிறப்பினைக் கூறவந்த சேக்கிழார் பெருமான் "அரசியல் நெறியில் வந்த அற நெறி வழாமற்காத்து" என நீதியை 'அரசியல் நெறி' யென்றும், அறத்தினை 'அற நெறி' என்றும் குறிப்பிட்டுள்ளமையை உணர்க. நீதி அறமாகாது. அறமெல்லாம் நீதியாகும். தனி மனிதன் ஓர் உயிர்க்குச் சிறிதும் ஊறு செய்யாமல் இருப்பது அறம். ஓர் அரசன் தன்னாட்டினைத் தாக்க வந்த எதிரிகள் பலரைக் கொல்லுவது நீதியாகும்.

**கசா. 'கற்றலும் கேட்டலும்'**

கற்றலிற் கேட்டலே நல்லது. கற்றலும் நல்லது. கேட்டலும் அதனினும் நல்லது. கற்க, சொல்ல ஒரு நா உண்டு. கேட்க இரு செவி உண்டு. அதிக நேரத்திற் கற்று அறிவதைக் குறைந்த நேரத்திற் கேட்டு அறிந்து கொள்ளலாம். உறுப்புக்கள் அமைப்பிலும் கற்கும் வாய் உறுப்புச் சற்றே தாழவும், கேட்கும் செவிஉறுப்புக்கள் உயரவும் இருக்கின்றன. ஆதலால் பேசுவோரினும் கேட்பவர்களே உயர்ந்தவர்கள் என்று கூடச் சாதாரணமாக ஓர் நயம் கூறலாம்.

---

## 5. சிவத்திரு. 'முதுபெரும் புலவர்' அவர்களுடைய பாடல்களுள் சில

(திரு. ஐயா அவர்களால், பல சமயங்களில் தம் மாட்டு அன்பு பூண்டோர் வேண்டிக்கொண்டவாறு பாடி எழுதிக் கொடுக்கப்பட்டவை)

**28—3—1944ல்**

**நாவலர், பண்டித உயர்திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்**
இறையடி சேர்ந்தது கேட்டுப் பாடிய

### இரங்கற் பாடல்கள்

1. *ஐயாவோ என்னுடைய அத்தாவோ*
   *அன்பாவோ யாரும் போற்றும்*
   *மெய்யாவோ எனைவிடுத்து விண்ணுலகம்*
   *சேர்ந்தாயோ விதியி தாமோ*
   *செய்யாவோ காலனைக்காய் திருவடியை*
   *எஞ்ஞான்றும் சிந்தை செய்யும்*
   *துய்யாவோ உயிரற்ற உடல்போல்யா*
   *னிங்கிருக்கத் துணிந்தே னந்தோ!*

2. *"நானிறக்கும் போதுநீ அருகிருந்து*
   *பொருளுணர்ந்து நவில்வோர் தம்மைத்*
   *தானிறக்கு மாறுசெய்வா சகப்பாடல்*
   *சொலல்வேண்டும் தவிராய்" என்று*
   *தேனிறக்கும் திருவாயாற் பலகாலும்*
   *சொற்றனையே தீயே னின்றி*
   *ஏனிறந்தாய் என்னுயிரே என்வினையோ*
   *அந்தோயான் என்செய் வேனே!*

3. இடையரு அன்புடன்தே வாரமொடு
வாசகமாம் இவற்றை யோதும்
நடையுடையாய் இறையுலகு சேருங்காற்
பெருமக்க ளாமந் நால்வர்
அடைவுடனே எதிரேவந் தழைத்தனரோ
அவருடனே அளவ ளாவி
விடையுடையான் பொருள்சேர்ந்த புகழ்பேசி
மகிழ்ந்தாயோ விறலோய் நீயே.

4. அருந்தமிழின் எல்லையெனப் பிற்காலந்
திகழ்வதனை யறிந்தோ யாதோ
பொருந்து வேங் கடசாமி எனும்நற்பேர்
பெற்றோர்கள் புகன்று போற்றத்
திருந்துநல குணங்களெலா முடன்வளர
வளர்ந்துமம்மர் தீர்க்கும் நல்ல
மருந்தெனுமோர் தமிழ்க்கல்வி யாங்கடலின்
நிலைதன்னை மாணக் கண்டோய்.

5. "கற்றதனு லாயபயன் அவ்வாறே
ஒழுகலொடு கவிஞர் வெள்ளிப்
பொற்றையினுன் அடிமலரை இடையரு
அன்புடனே போற்றல்" என்று
மற்றுமொரு நினைவின்றி அவனடியே
சிந்திக்கு மாட்சி பெற்றோய்
உற்றவரும் உருதவரும் ஒருபடியே
வாழ்கவெனு முள்ள முள்ளாய்!

6. நல்லவர்கள் நிறைசிராப் பள்ளியுறு
கல்லூரி நலமே சார
எல்லவரும் மகிழ்சிறப்பப் பிறபள்ளிப்
புலவரெலா மிறும்பூ தெய்தப்

பல்லவராய் மாணவர்பல் கலைக்கழகப்
பட்டமுடன் பதக்கம் வாங்க
மல்லலுறு தமிழ்பயிற்றிப் பல்லாண்டு
புலன்சிறக்க மகிழ்ந்த மாண்போய்!

7. நின்னுடைய கலைத்திறமும் நடைமாண்பும்
அறிஞர்பலர் நேர்ந்து கூறப்
"பொன்னதனைப் பெறுதலினும் புலவனொரு
வனைப்பெறுதல் போற்றத் தக்க"
தென்னுமுண்மை தனைநன்கு யறிராஜா
சர் அண்ணா மலையாம் ஏந்தல்
தன்னதொரு கல்லூரிக் 'கணிகலமாய்
வருக'வெனச் சார்ந்தா யையா!

8. தண்டமிழின் விரிவுரையர் எனும்பதவி
சில்லாண்டுத் தாங்கி யாங்கே
"உண்டல்முத லியவற்றுற் களிக்கின்றோம்
தமிழ்ப்புலமை யுயர்ந்த நாட்டார்
வண்டமிழ்மா ணவராகத் தவம்செய்யோம்"
எனக்கருதி வாடி னோர்க்குக்
கொண்டலெனத் தமிழ்மழையைப் பொழிந்தவர்தம்
உளங்குளிரக் கொண்ட மேலோய்.

9. பாவாக்கும் வன்மைசிலர்க் குரைகாணும்
திறஞ்சிலர்க்குப் படித்த ஒன்றை
நாவாக்கும் இன்மொழியாற் கேட்போர்தம்
உளங்குளிர்க்கும் நலஞ்சில் லோர்க்குத்
தேவாக்கும் இலக்கியத்தில் வன்மைசிலர்க்
கிலக்கணத்தின் திறம்சில் லோர்க்குத்
தூவாக்கு மறிவுநூல் வன்மைமிகச் சிலருக்கே
துலங்கக் காண்போம்.

10. "இத்துணையும் வல்லவராய் எவரொருவர்
உளர்" என்னின் எல்லாம் வல்ல
சித்துருவாய் அம்பலத்தே நடிக்கின்ற
திருவடியைச் சிந்தித் தென்றும்
பத்திசெயெம் உயிரே! நிற் காட்டிவிடில்
எதிரொருவர் பகர்வா ருண்டோ,
எத்திசையும் புகழ்மணக்க இருந்தநண்பா!
உனையினிநான் என்று காண்பேன்!

11. "நாவலவர் எனும்பட்டம் தகுதியினுற்
பெற்றநீ நாடு காக்கும்
காவலர்க்கும் தலைவணங்காய் "முகில்பொழியும்
துளியன்றிக் களிநீர் வேட்கை
போவதற்கா ஓடுநீர் தனையுண்ணத்
தலைவனைத்தாற் போகும் மானம்
ஆவ"தென அதைப்பருக நினையாத
வான்வாழ்த்தி யதனை ஒப்பாய்.

12. "எள்ளளவும் நெருங்குதற்கும் தகுதியிலா
என்னையும்ஓர் இனிய நண்பாய்க்
கொள்ளுதற்குத் துணிந்தஉன்றன் பேதைமையை
ஒருநாவாற் கூறவொண்ணு
விள்ளலிலா நண்பர்மறு அறியாதாய்
புறங்கூறும் விதமே கல்லாய்
கள்ளமுறு பொய்பேசத் தெரியாதாய்
கபடநெஞ்சம் கனவிற் காணுய்."

13. "இல்லையெனச் சொலத்தெரியாய் அழுக்காறென்
றுண்டென்றே இன்னுந் தேருய்
தில்லையுறு பரம்பொருளின் சேவடியை
மறப்பதற்கும் தெரிய கில்லாய்

நல்லையெனச் சொலலன்றி யல்லையென
யாவரையும் நவிலல் தேற்ருய்
தொல்லைவினைத் துட்டரையும் தூய்தல்லா
மொழியினுற் சொல்லக் கல்லாய்."

14. "சூழ்ச்சியினுற் புகழ்தேடும் புத்திநுட்பம்
அணுத்துணையும் தோன்ற கில்லாய்
வீழ்ச்சியுறுமக்களைமே லேற்றுவதல்
லால் அழுத்தும் விதமே கல்லாய்
தாழ்ச்சிசொலி உனையுணர்த்த லன்றியே
உயர்ச்சிசொலுந் தன்மை தேருய்
ஆழ்ச்சிமிகு பேதைமையிவ் வுடையோயைப்
புலவனென்ற தறியா ஞாலம்.

15. "நின்னுடைய தலைமையேற் றகமகிழா
அவையில்லை நிறைவால் யார்க்கும்
முன்னவஉன் சொற்பொழிவால் மனங்குளிரா
மக்களிலை முதிரு மன்பின்
நன்னர்மிகும் உனைப்போற்ருப் புலவரிலை
நின்னுடைய நடையைப் போற்றிச்
சொன்னபொழு துளங்குளிர வாய்குளிரா
மாந்தரிலை சொல்லின் செல்வா."

16. "வான்பாவி வயங்குமிந்த மண்ணுலகிற்
பெரும்புகழை வயங்கச் செய்தாய்
தேன்பாவிச் சுவைபயக்கு மின்சொல்லால்
யாவரையும் தெருட்டு மேலோய்
நான்பாவி யாதலினுல் இறந்தாலும்
நின்னுலகு நண்ண மாட்டேன்
ஏன்பாவி பழிபடர இருக்கின்றேன்
நடைப்பிணம்போ லென்றன் ஐயா!"

17. 'ஐயகோ எனைவிடுத்து நீமறைதல்
சரியேயென் அன்பா உன்றன்
கையினுல் நாண்பூட்டும் அன்றுமுதல்
இன்றளவும் களிப்பாய் நிற்குச்
"செய்பணியே பெருந்தவ"மென் றற்பகலாய்த்
தொண்டுசெய்து சிறந்த மாதை
நைவகையில் விடுத்ததுவும் ஞாயமோ
நடுநிலையோ நவிலாய் ஐயா'!

18. 'ஐயனே அடுத்தமதி நினதறுப
தாண்டுவிழா அதனைக் காணச்
செய்யதமிழ்ப் புலவராம் யாமெலாம்
எதிர்பார்த்துத் திரண்டு நிற்கத்
துய்யவிழா அதற்கெதிராய் நீமறைந்தா
யென்கின்ற சுடுசொற் கேட்டு
நையவோ அமைந்திருந்தோம் எம்வினையின்
வலிதானும் நவிலற் பாற்றே?'

19. 'வேய்நீங்கும் தோளுமைபாள் பாகனரு
ளாலிந்த வெவ்வி தான
நோய்நீங்கிப் பல்லாண்டிங் கிருந்துதமிழ்ப்
பணிசமயத் தொண்டு செய்ய
ஆய்நீங்கும் மகக்காண விழைவதுபோல்
அளவிலா அருத்தி கொண்டாய்
தாய்நீங்கும் சேய்போல யாமவலக்
கடல்வீழத் தரணி நீத்தாய்.'

20. 'அன்பனே யூனுருக்கி அறிவொளியின்
வளம்பெருக அமைந்த எங்கள்
முன்பனே இறையுலகில் நீயிருந்திம்
மண்ணுலகில் முதல்வற் போற்றுத்

துன்பனும் எனைப்போல்வார் தூயரா
கத்தமிழும் துலங்கு சைவ
இன்பமார் சமயமுமே லோங்க அவன்
அடிவேண்டி யிருத்தி அண்ணல்.'



உ

விய ஆண்டு, ஆனித்திங்கள் **20, 21**-ஆம் நாட்களில் **(4, 5—7—'46)**
நடைபெற்ற அரியலூர்
'மணிவாசக மன்ற'த்தின் **3**-வது ஆண்டு நிறைவு விழாவில்
முதல் நாள் தலைமை தாங்கிய,
வேலூர், ஓய்வுபெற்ற மாவட்டக் கல்வி அதிகாரி
உயர்திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை B.A., L.T., அவர்கட்கு
அளிக்க எழுதிக் கொடுத்த

## வரவேற்பிதழ்



பன்னிருசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

1. 'சீரார் மக்கள் உறுகதிக்குச்
சிறந்த வழிகள் இரண்டுண்டு
திகழும் இல்லின் அறமும்நலந்
தேருந் துறவும்' என எவரும்
நேரா யறியத் துறவினிலே
நிகர்ப்பார் மிக்கார் யாருமிலா
நேசத் திருவெண் காட்டடிகள்
நேர்உத் தரமாம் ஒற்றியிலும்

பேரார் இல்லின் ஒழுக்கத்தில்
பேசும் இணையில் லாத்தேவர்
பிறங்கும் தெற்காம் மயிலையிலும்
பேண இருந்து காட்சியருள்
காரார் மாடம் ஓங்குசென்னைக்
கவினுந் திருவும் கதித்தோங்கும்
கலையும் பிறவும் அளந்துசொலக்
கற்றூர் உலகில் யாருளரே?

2. அந்தப் பதியில் வாழ்குடிகள்
அநேகம் அவற்றுள் ஓர்குடியாய்
அமைந்து பலவாம் நற்குணங்கள்
அழகாய் மிளிரத் தீமையெலாம்
சிந்தப் புரிந்த இல்லறத்தின்
தெளிந்த பயனுய்த் தோன்றிமிகு
தெய்வப் பண்பு பலதம்முட்
சேர்ந்து முரணி வளர வளர்ந்(து)
'இந்தப் புவியில் இப்பொழுதிங்
கிலங்கும் ஆங்கி லம்மின்றேல்
ஈங்கு நாமும் இலம்'என்றே
எண்ணும் இயல்பிற் கேற்பவே
சந்தத் தமிழோ டம்மொழியும்
தளர்வி லாது பயின்றுயர்வாய்ச்
சாற்றும் பீ.ஏ.,எல்.டி., யெனும்
சதுரார் பட்டம் பெற்றருள்வோய்.

3. 'கற்பார் தொகையோ மிகக்குறைவக்
கற்றோ ருள்ளுங் கற்றபடி
காற்பங் கேனும் நடப்போரைக்
காண்டல் அரி'தென் றவலமுறும்
பொற்பார் அறிஞர் களிப்போடும்
'புலவர் பலர்முன் வகுத்துள்ள

புனித அறநூல் நீதிநூல்
புகழ்சேர் அறிவு நூல்களெலாம்
நற்பா ரதனில் இருப்பதனுல்
நலமுண் டுண்டே' எனநவில
நாளும் சிறிதும் பிழையாது
நடக்கும் மேலாம் நற்றவத்தோய்!
அற்பார்ந் தளிந்த உளத்தோடும்
யாவ ரிடத்தும் செயலாற்றும்
அளிய உன்றன் எளிமையினை
அறியா தார்மற் றறியாரே.

4. "கல்வித் துறையில் மேற்சென்று
கனஞ்சேர் உத்தி யோகத்துக்
காண இருந்தக் கடமைதனைக்
கவினச் செய்த காலத்தும்
ஒல்லச் சிறந்த அதனினின்றும்
ஓய்வு பெற்ற இஞ்ஞான்றும்
ஒத்த நடையை யுடையை" என
உலவாப் புகழும் அறிவுமுடைப்
பல்வித் தகரும் பாராட்டும்
பரம சாந்த குணசீலா!
பாரில் நல்லோர் இருப்பதற்குப்
பகருஞ் சான்ருய் வாழ்பெரும!
நல்வித் தகஞ்சால் எம்மன்ற
நலஞ்சார் மூன்ரு வதனுண்டில்
நாடுந் தலைமை வகிப்பதற்கு
நாங்கள் செய்த தவம்யாதோ?

5. சைவப் பணியே உன்னுயிர்ப்புச்
சாரும் அதுவே உன்றனுயிர்
தவமென் பதுவும் அதுநினக்குத்
தருக்க முறைக்குப் பொருத்தமுறு

மெய்வைத் துயர்ந்த அதுவேநின்
மேலாம் உடைமை விரிந்துநின்பால்
மேவும் உளமும் உயர்சொல்லும்
வியன்சீர் செயலு மனைத்துமது
பைவைத் துயர்ந்த பாம்பணிந்து
பாதி மதியும் உடனணிந்த
பரமன் அடியைப் பரவுதலாற்
பாரிற் பகைத்தோர் அதுநீங்கி
உய்வைப் பெறுதல் உளங்கொண்டிங்
கோயா துழைக்கும் உத்தமனே!
உன்னற் கரிய பெருஞ்சீர்த்தி
உரவோய் வருக! வருகவே!!

6. அருமைச் சச்சி தானந்த
ஐயா, வருக! அருள்பழுத்த
அன்பே வருக! திருவோங்கும்
அண்ணல்வருக! வருக!! என்றும்
மருவ இனிய மணிவருக!
வாராச் செல்வமே யனைய
மருந்தே வருக! கற்பகமா
மலரே வருக! சிவநெறியாந்
திருவை யடைந்த பெருவாழ்வின்
திறமே வருக! 'இந்துமதச்
சிறப்புக் குரு'வென் றெவரும்சொல்
செல்வா வருக! தமிழ்மறையாம்
உருவம் அனைய மணிமன்றத்
தொப்பில் தலைமை பூண்டிடநல்
உயர்வே வருக! மன்றநலம்
ஓங்க வருக! வருகவே!!

——

உ

## ஒரு நாளிரவு தூங்கவிடாது துன்புறுத்திய அரியலூர்க் கொதுகுகளைப் பற்றிப் பாடியது.

வெண்பா

—

1. அரியலூ ரின்கண் அளவிறந்த எண்ணால்
விரியுங் கொதுகின் விறற்கே—எரியும்
அனலாடி யஞ்சியன்றோ யானைபுலித் தோல்போர்த்
துனலரிய காட்டுளொளித் தான்.

2. ஊழிநாட் பாற்கடலி னூடே படுத்திருந்தான்
ஆழியான் என்னென் றதிசயிப்பார்—பாழியுறும்
இவ்வூர்க் கொதுகின் இயல்புதனை யோரிரவும்
செவ்வை யுறஅறியா தார்.

3. அயனுமிவ் வூர்மசகம் அஞ்சாதெப் போதும்
புயலுங் கனலுமெனப் பொங்கிப்—பயமிருக்க
நாற்றிசையும் போர்தொடுக்கு மென்றஞ்சி நான்முகத்தை
ஏற்று விழித்திருந்தா னே.

4. மாரன் அனங்கனாய் வாழ்வதைமு னூரெரித்த
தீரன் செயலென்று செப்புவார்—யாரறிவார்
அன்னவனு மிக்கொதுகின் ஆடல்தனக் கஞ்சியே
தன்னுடலைத் தான்மறைத்த தை.

5. இலங்கை யரசன் இளையோனை மாலை
அலங்கந லந்தன்னில் ஆயிரமா ஓட்டிச்
சகசமவன் தூங்கலெனச் சாற்றினா னிவ்வூர்
மசக வலியறியா தால்.

# 6. சிவத்திரு. ஐயா அவர்களுடைய கடிதங்களுள் சிலவும், பிறவும்.

I கடிதங்கள் :—

மு. பாலசுப்பிரமணியத்திற்கு எழுதியவை :—

க. வேலூரிலிருந்த மன்றத்தினை அரியலூரில் துவங்குவதுபற்றியது.

கொழும்பு,
2-8-'45

அன்ப,

நலம். 22-7-45-ல் நீயும் குமரவேலும் எழுதிய கடிதம் பூவாளூர் போந்து 31-ல் இங்கு வந்து கிடைத்தது. யான் 29-7-45-ல் எழுதி உங்கட்கு விடுத்த கடிதமும் கிடைத்திருக்கலாமென நினைக்கிறேன். என் கடல் கடந்த செலவு குறித்து நீங்கள் ஒரு சிறிதுங் கவல வேண்டுவ தில்லை. இங்கு வருதற்குக்கப்பற்செலவு (பிரயாணம்) 2½ மணியளவேதான். 1939ல் மலாய் நாடு சென்ற காலை ஒரு வாரம் கப்பலிலேயே செல்ல நேர்ந்தது. அந்த நாட்டில் ஏறக்குறைய 8000 மைல் சுற்றியிருக்கிறேன். 60 சொற்பொழிவுகள் (பல இடங்களில்) ஆற்றினேன். அங்கிருந்து மீளுங்கால் 13 பவுண்டு எடை என் உடல் கூடியிருந்தது. இங்கும் யானிருக்குமிடம் மிக உயர்ந்தது. சுகாதாரக் குறைவில்லாதது. உணவு முதலியவற்றில் உபசாரமோ உங்களை விஞ்சியது. எனவே எதன் பொருட்டும் நீங்கள் கவல வேண்டாம். என் உள்ள நிலையும், உடல் நிலையும் நீங்கள் நன்கறிந்தனவே!

நமது 'மன்றம்' அரியலூரிற்றொடங்கியதை யாருமறியும் வண்ணம் ஓர் 'திறப்பு விழா'வோடு தொடங்க

வேண்டும். அதற்குச் செலவுயாதும் வேண்டியதில்லை. நிகழ்ச்சிமட்டும் வெளியிட்டாற்போதும். யான் வந்து சொற்பொழிவாற்றுகிறேன். யான் தாய் நாடு திரும்புங் கால் நாளைக் குறித்து எழுதுவேன். உங்கள் நல முதலியன அறிவிக்க. பிறபின்.

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

உ

## உ. இடையருது திருமந்திரம் (அதாவது திருவைந்து) ஓதப்பணித்தமை.

பூவாளூர்
7-6-'52

அன்ப,

நலம். உன் 4-6-52 கடிதம் கிடைத்தது. யான் 4-6-52 இரவு வெளியூர் சென்று, 5ல் திருப்புத்தூரிலும், 6ல் குன்றக்குடியிலும் பேசிவிட்டு, இன்று காலையில் வந்து தான் உன் கடிதம் பார்த்தேன்.

நீ புள்ளம்பாடிக்கு வந்த செய்தி உன் கடிதத்தாலறிந் தேன். முன் ஒரு சமயம் உன் கடிதமொன்று பெருவருத் தத்தை விளைத்தது, அது போலவே, இக்கடிதமும் அதனை விளைக்கிறது. விரைவில் உன்னை வந்து காண்பேன்.

சுருக்கமாக ஒன்று சொல்கிறேன். ஆனால் அஃதிடை விடாது சிந்தனையில் வைக்க வேண்டியது. அது ' கழிந்த செயலைக்குறித்து வருந்த வேண்டாம்' என்பதே! மற்றும் ஊழால் நேரும் நோய் முதலியவற்றைக் கருதி வருந்துவதால் யாது பயன்?

இடையருது திருமந்திரம் ஓதுக.

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. ச.

உ

**ரு. உடல் நிலை பற்றி, 'எல்லாம் இறைவன் செயல்' என்று எழுதியது.**

சென்னை
19-12-1958.

அன்ப,

*நலம். யான் ஒருவாரத்தில் திருச்சி வந்துவிடலா மென்று எண்ணி வந்தேன். திருவருட் குறிப்பு வேருக இருக்கிறது. பலரைக் கொண்டு எல்லாச் சோதனைகளை யும் செய்து எக்ஸ்ரே எடுத்து 17-12-'58 காலை பெரிய டாக்டரிடம் சென்ருேம். அவர், "வியாதியில் சில ஐயப் பாடுகள் காணப்படுகின்றன. ஆதலால் என் ஆஸ்பத் திரியில் சில நாள் தங்கவேண்டும்" எனக்கூறி விட்டார். எனவே நேற்றிரவு 8 மணிக்கு இங்கு (ஜெனரல் ஆஸ் பத்திரி) வந்து ஒரு படுக்கையில் தங்கியிருக்கிறேன். சம்பந்தன் மகன் மெய்கண்டான் எனக்குத் துணையாக இருக்கிருன். எல்லாம் இறைவன் செயல்.*

அன்புள்ள,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

உ

க. குமரவேலுக்கு எழுதியவை :—

**சு. ஓய்வின்றிப் படிக்கவும் இறை வழிபாடு செய்யவும் எழுதியது.**

திருச்சி,
9-11-43.

அன்ப,

*இங்கு உன் அன்னை முதலிய அனைவரும் நலம். அவணலம் அறியுமவாவினன். உன் கடிதம் 19-10-43-ல் எழுதப்பட்டிருப்பினும் தபாலிற் சேர்த்தது காலந்*

தாழ்த்துப் போலும். எனவே 31-10-43ல் மானுமதுரை சென்று பின் இங்குள்ள சபையில் வந்து கிடந்தது. யான் இரண்டு வாரங்களாகச் சென்னி மலை, பவானி, திருப்பூர், கோவை, முதலிய இடங்கள் சென்று நேற்றுத்தானிங்கு வந்து அதனைப்பார்த்தேன். யான் நாளை மாலை மானு மதுரை போவேன். 19-11-43 முடிய அங்கிருப்பேன். பின்னர் வெளியூர் செல்வேன். அதற்குள் உனக்கு இக் கடிதம் கிடைத்து நீ அங்குவர நேரின் மகிழ்ச்சியே. வருவதாயின் முன்னரே (டைதேதிக்குள்) கடிதம் எழுதுக. ஏனெனின் நீ வருங்காலையான் ஊரிலில்லாமலிருந்தால் இருவருக்கும் அஃதின்னல்தரும். அன்றேல் கார்த்திகை மாதம்யான் திருவண்ணமலை போகவருவேன். அது போது அங்கு வந்து உன்னைக்காண்பேன். ஓய்வின்றிப் படிப்பதிலும் இறை வழிபாட்டிலும் காலம் செல்வதாக.

அருமைத் தாத்தா, அம்மா, மருகி முதலியோர்கட்கு என் அன்பு தெரிவிக்க. பிற பின்

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

௨

ரு. தாத்தா எசனூர் மு பொன்னுசாமி பிள்ளை சிவபதமடைந் தமை தெரிவிக்கப்பட்டதற்கு எழுதியது.

பூவாளூர்,
30-10-'45

அன்புள்ள குமரவேலுக்கு ஆண்டவனருளால் எல்லா நலமும் உண்டாகுக.

நலம். உன் 22-10-'45 கடிதம் இங்கு வந்து, தென் காசி சென்று 28-10-'45 இரவு 8 மணிக்குத் திருநெல் வேலியில் வந்து கிடைத்தது.

அருமைத் தாத்தா அவர்களின் ஆருயிர் ஆண்டவனருளடியிலடங்கி அமைதியுறவும், அருமைத் தாயாருடைய, உன்னுடைய ஆகுலம் நீங்கவும் எல்லாம் வல்ல இறைவன் திருவருளை வேண்டி வாழ்த்தி வணங்குகின்றேன்.

யான் நேற்று மாலையிலேதா னிங்கு வந்தேன். தீபாவளிக்கு மாப்பிள்ளை இங்கு வருவதாலும், அதற்கு வேண்டிய அலுவல்களை (துணி வாங்குதல் முதலிய) சில பார்க்க வேண்டியிருத்தலாலும் அங்கு வந்து உடனே திரும்புவதற்குரிய பிரயாண வசதி உள்ள ஊரல்லவாதலாலும், இவையனைத்திலும் மேலாக, உன் தாயாரும் உடன் வர விரும்புவதாலும் நாளை நடைபெறும் இறுதிச் சடங்குக்கு யான் வர முடியாமைக்கு வருந்துகிறேன்.

வேலூர் வரும் நாளைத் தெரிவித்தால் நாங்கள் அங்கு வருகிறோம்.

எனக்கு 9-11-45ல் திருவனந்தபுரத்திலும் 11ல் இராஜபாளையத்திலும் 12' 13ல் சிவகிரியிலும் பேச்சுண்டு. பிற பின்,

அன்பன்

(ஒப்பம்) அ. மு. சரவணன்

உ

**சூ. உடலைப் பேணுமாறு எழுதியது.**

பூவாளூர்,
26.8.'53

அன்புருவாகிய செல்வ,

நலம். உன் 24-8.53 கடிதம் கிடைத்து ஓரளவு அமைதியை உண்டு பண்ணியது. இளம்பருவத்திலேயாதொரு தீங்கான எண்ணமுமில்லாத ஓர் பிறவி வாய்ப்பதானல், அது பல பிறவிகளிற் செய்த நற்றவத்தின் பய

னேயாகும். அவ்வாறு பெற்ற உன் உடலைப் பொன்னே போற் போற்ற வேண்டுவது உன் கடமையாகும். அதில் அசிரத்தை காட்டினுல் எச்சரிப்பது உன் நல் வாழ்வில் நாட்டங்கொண்ட என் போல்வார் கடமையாகும். எனவே உன் உடலை உனக்காக நீ பேணுவிட்டாலும், நீ உயர்ந்த நிலையில் வைத்துக் கருதுகின்ற என் வேண்டுகோள் அல்ல, கட்டளையைக் கருதியேனும் உன் தவ வுடலைப் பேணுதல் வேண்டும்.

ஒரு வாரத்திற்கு முன் செந்துறை தருமலிங்கம் மாடு வாங்கிக்கொண்டு மற்ருெரு ஆளுடன் இங்கு வந்து ஓரிரவு தங்கிச் சென்ருன். அவனிடமும் உன்னை இங்கு வருமாறு சொல்லியனுப்பினேன். அவன் உன்னைக் கண்டு சொல்லவில்லை என உன் கடிதத்தாலறிகிறேன். உடல், உன் கடிதத்திற் கண்டபடி சிறிது நலம் பெற்றிருப்பினும் இங்கு வந்து 2 நாட்களேனும் தங்கிச்சென்ருல் எங்கள் உளளம் அமைதி பெறுதலுடன் மகிழ்ச்சியையும் அடையும்.

இயலுமேல் கட்டிற் கயிறு முன் போட்டதுபோல் ஒன்ருே அல்லது இரண்டோ திரிக்கும்படி செய்யவும். உடல் நலமறியும் விருப்பினன்.

அன்புள்ள,
(ஒப்பம்) அ. மு. சரணவன்.

உ

மு. பா; க. கு இருவருக்கும் எழுதியவை :—

எ. தமிழ், புகுமுக வகுப்புப் பாடஞ் சொல்வது பற்றியது.

பூவாளூர்,
15-1-'48

அன்பரீர்,

நலம். உங்கள் கடிதம் கிடைத்தது. யான் இன்று மாலை நெல்லை, குலசை முதலிய இடங்கள் சென்று

25இலோ சிறிது பின்னோ இங்கு வருவேன். வந்து உங்கட்குத் தெரிவித்துவிட்டு அங்கு (வேளூர்) வந்து 10 நாட்களாயினும் தங்கிப் பாடத்தை முடித்துவிட்டே மீள்வதென்று கருதியுள்ளேன். திருவருள் துணை செய்ய வேண்டும்.

இந்த ஆண்டு நமக்கு மூன்று மூட்டை துவரை வேண்டும். இரண்டிடங்களிலும் (வேளூர், அரியலூர்) இருவரும் முயற்சிசெய்து முதல்விலையில் நல்ல சரக்கா கப்பார்த்து வாங்கி விடவும். பிறபின்.

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. ச.

உ

அ. 'இசைந்த இடத்திற்குப் போகாதிருப்பதில்லை' என்று எழுதியது

பூவாளூர்,
8-8-'48

அன்பரீர்,

நலம். உங்கள் 29-7-'48 கடிதம் 4-8-'48ல் இங்கு வந்திருந்தது. நீங்கள் தபாலிற் சேர்த்தது நாட்கள் தள்ளியிருக்கலாமென நினைக்கிறேன். முத்திரை நன்ருகத் தெரியவில்லையாதலால் தபாலிற் சேர்த்த நாளை அறிந்து கொள்ள முடியவில்லை. நிற்க.

யான் அரியலூரிலிருந்து வெளியூர் சென்று, இடையில் 2 நாட்கள் வந்து தங்கி மறித்தும், கோம்பை, முதலிய இடங்கள்சென்று 29-7-'48-ல்இங்கு வந்து, 2-8-'48-ல் இராமேச்சுரம் சென்று 3, 4-ல் அங்கும், 5ல் காரைக்குடியிலும் பேசிவிட்டு, 6-ல் பலவான்குடி சென்று, இனிய நண்பரொருவரைப் பார்த்துவிட்டு, நேற்றிரவுதா னிங்கு வந்து உங்கள் கடிதம் பார்த்தேன்.

நாளை மாலை வண்டியில், யானும் உங்களன்னையும் திருவஞ்சைக்களம் செல்கின்றோம். 11-8-'48ல் சுந்தர மூர்த்தி சுவாமிகள் குருபூஜை யாதலால் அன்று அங்குத் தங்கி, மறுநாள் சென்று சேரன் செங்குட்டுவன் கட்டிய கண்ணகி கோயிலைக் கண்டு வணங்கி மீள்வதாகக் கருதி யுள்ளேன். ஒரு வாரமாகலாம். வரும் நாளைக் குறித்துப் பின்னர் எழுதுவேன். அந்த நாளில் நீவிர் இங்கு வரலாம். எழுதியவைபற்றிப் பேசலாம்.

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

உ

அன்புள்ள குமரவேலுக்கு,

24-7-48ல் திருச்செந்தூரில் 1, 2-9-'48 ஆகிய 2 நாட்கள் பேசவேண்டும் என்று கடிதம் வந்து யானும் உடன்பட்டு எழுதிவிட்டேனே! என் செய்வேன்? 'இசைந்த இடத்திற்குப் போகாதிருப்பதில்லை' யென்பது நீ அறிந்த தொன்று. ஆவணி 22-க்குமேல் நாளிருந்து, குடமுழுக்கு வைத்துக்கொண்டால் வரலாமென நினைக்கிறேன். அதற்காகச் செய்த ஏற்பாடுகளை மாற்றவேண்டாம். மாற்றுவதால் சிறிது சிரமமிருப்பினும் செய்யவேண்டாம். நன்கு ஆலோசித்து எழுதுக. ஆவணி 4, 5ல் தேவகோட்டையிலிருக்க வேண்டும். ஆவணி 9ல் திருச்செந்தூர் விழாத்தொடங்குகிறது. உன் அன்னையும் வரவிரும்புகிருளாதலால் அவளையும், நெல்லை சென்று உன் தங்கையையும் அழைத்துக் கொண்டு விழாவின் தொடக்கத்திலேயே அங்குப் போகும் கருத்துடையேன். பிற பின்.

அன்பன்,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

உ

சூ. தம்மைப் பாராட்டுவன விரும்பாது எழுதியது.

பூவாளூர்,
10-8-'53

அன்பரீர்,

திருவருளாலிவணனைவரும் நலம். அவணலமறியு மவாப் பெரிது முடையேன். நீங்கள் விடுத்த 2-8-'53 கடிதமும், பின்னரனுப்பிய திணை 5 படியும் உரிய போதே கிடைத்தன. எனினும் 3-8-'53 முதல் மதுரை, நெல் லைக்குச் சொற்பொழிவினிமித்தம் சென்ற யான் 8-8-'53 மாலை வந்துதான் அவற்றைப் பார்த்தேனாதலால் உடனே கடிதம் எழுத இயலாது போயிற்று.

உங்கள் கடிதம் எனக்கு ஒரு வகையில் மகிழ்ச்சி தரு வதாயினும், என்னைப் பற்றி எழுதியிருக்கும் கருத்துக் கள் துன்புறுத்தவும் செய்கின்றன. இனி அவ்வாறு எழுதமாட்டீர்களென்று நம்புகிறேன்.

செல்வன் குமாரவேலின் உடல் நிலையை நினைக்க உள்ளத்தில் அமைதி ஏற்படவில்லையாதலால், இருவரும் இங்கே வந்தால் குமரவேல் மட்டும் இங்குச் சின்னாட் கள் தங்கி மருத்துவம் செய்து உடலை நலப் படுத்திக் கொண்டு போகலாம் எனக் கருதுகின்றேன். வரும் நாளைத் தெரிவிக்கவும்.

அன்புள்ள,
(ஒப்பம்) அ. மு. சரவணன்.

உ
சிவமயம்

க0. திரு. ஐயா அவர்களால் க. குமாரவேலுக்கு எழுதப் பட்ட முதற்கடிதம். தாய்மொழியைப் படிக்கப் பணித்துள்ளமை:-

"பெருஞ்சொல் விளக்கனார்" அரியலூர்,
அ. மு. சரவண முதலியார், 19-2-'42
தலைமைத் தமிழாசிரியர்,
போர்டு ஹைஸ் கூல்.

திருவளர் செல்வன் குமரவேலுக்கு, ஆண்டவனருளால் எல்லா நலமும் உண்டாகுக.

அன்பும் அறிவும் நிறைந்த செல்வ,

இவணலம். அவணலமறியும் அவாவுடையேன். உன் அருமைக் கடிதம் கிடைத்தது. அஃது உன் உள்ளமென்னுங் கூட்டிலுள்ள அன்பென்னும் மயில் அறிவாகிய எழுது கோலைத்தோய்த்து எழுதப்பெற்று உணர்ச்சி வடிவமாய்க் காட்சியளிப்பதைக் கண்டு கண்டு களிபேருவகை யெய்தினேன்— எய்துகின்றேன்— எய்துவேன்.

உழுவலன்புடையாய்,

உன் போன்ற அடக்கமும் அறிவும் அன்பும் பிற நற்குணங்கள் யாவும் ஒருங்கே படைத்த மாணவர்களை, என் போலும் நற்பேறிலாத ஆசிரியர்கள் அடைவது அரிது எனினும், யான் செய்த சிறிது அறங்காரணமாக நீ வாய்த்தாய். அது முற்றுங் கைகூடாத வகை ஊழ் முந்திவிட்டது. கழிந்த பேற்றுக்கு இரங்கலாற் பயனென்னை?

உனக்கு இறைவனருளாற் போதிய நலமிருப்பதாக அறிகின்றேன். ஆதலால் நீ இப்போதே குடும்பப் பொறுப்பை முற்றும் ஏற்றுக்கொள்ளாமல், ஆவன செய்துவிட்டு, நான்கு ஆண்டுகள் நம் தாய் மொழியைப் படித்துத்தேர்ச்சி பெற்ருயானல் அஃது இம்மை மறுமைப்பயனை நினக்கு அளிப்பதோடு மற்றையோரை யும் பெருநல மடைவிக்குமென்பது திண்ணம். அங்ஙனம் கூட்டுவிக்குமாறு வேண்டுவார் வேண்டுவதையே ஈயும் எந்தையின் இணையடி போற்றுகின்றேன்.

பூவாளூர்ச்சபையின் ஆண்டு விழா 7, 8-3-'42 ஆகிய இரண்டு நாட்களும் நடைபெறும். நிகழ்ச்சி, வந்த பின்னர் அனுப்புவேன். நீ தவருமல் வருவாயென்று நம்புகிறேன்.

எனக்கு 2-2-'42ல் நாமக்கல்லிலும், 27-2-'42ல் (ரேடியோ) வாஞெலி நிலையத்திலும், 1-3-'42ல் திருப்பூரிலும் சொற் பொழிவுகள் உள்ளன. மற்றும் உன் வீட்டிலுள்ள அனைவரின் நலமும், பிறவும் அடிக்கடி தெரியவிரும்பும்.

அன்புள்ள,
(ஒபபம்) அ. மு. சரவணன்.

II பிற:—

உ

1. க. குமரவேலுக்குக் கொடுத்த நற்சாட்சிப் பத்திரம்

க.குமரவேல் என்ற மாணவர் பள்ளியிறுதி வகுப் பில் என்னிடம் ஓராண்டு தமிழ் பயின்று வந்தாராக லின் அவரைப்பற்றி யான் நன்கறியலானேன். பள்ளி யில் நற்குணத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாக எல்லா ஆசிரியராலும் கூறப்பட்டு வந்தார். தாய் மொழியாகிய தமிழ் மொழியே அவர் உயிரெனில் அதுமிகையாகாது. கட்டுரை எழுதிஞல் அதனைக் கண்ணுறும் ஆசிரியர்

எவராயினும் பல முறை படித்து மகிழுமாறு அது சொல் வளமும் பொருள் வளமும் செறிந்திருக்கும். கையெழுத்து மிக மிக நன்ருய் இருக்கும். கூர்த்த மதியுடையவர். சுருங்கக் கூறின் நன்மக்களிடம் எத்துணைப் பண்புகளுண்டோ, அத்துணையும் அமையப் பெற்றவரென்றே கூறலாம். இங்ஙனம் சிற் சில மாணவர்களிருத்தலாலே தான் ஆசிரிய வாழ்க்கையிலும் ஓர் மகிழ்ச்சியுண்டு என அடிக்கடி யான் கருதுவதுண்டு. அவருக்குக் கடவுள் எல்லா நலமும் அருள்வாஞக.

போர்டு ஹைஸ்கூல்
அரியலூர்
21-7-'42

(ஒப்பம்) அ. மு. சரவண முதலியார்,
தலைமைத் தமிழாசிரியர்.

உ

2. முன்னுரை— 'அழுது அடியடைந்த அன்பர்.'

'இந்த நூலைத் தங்கள் சொந்தச் செலவில் வெளியிட்ட அரியலூர் மணிவாசக மன்றத்தாரைப்பற்றிச் சில கூறக் கருதுகின்றேன். இம்மன்றச் செயலாளர் இருவர். ஒருவர், மு. பாலசுப்பிரமணியம்; மற்ருெருவர் க. குமரவேல். இவ்விருவரும் தங்கள் உள்ளம்போற் பெயரும் ஒன்ருகவே இருக்க வேண்டுமென்று கருதி 'முருகவேல்' என்ற பெயரை வைத்துக்கொண்டார்கள். இவர்கள் என் அருமை மாணவர்கள். சுருங்கக்கூறின், பழையகாலத்துக் குருகுல மாணவர்கள்போல் நற்பண்பே வடிவமாக உள்ளவர்கள். ஆனுல், அவர்கட்கு ஆசிரியஞக இருக்கும் தகுதி எனக்கில்லை என்பதை யானும் என் உயிர்க்குயிராயுள்ள இறைவனும் அறிவோம். ஆனுல், என்னைப்பற்றி அவர்கள் கொண்டிருக்கும் கருத்தோ நினைத்தாற்கூட எனக்கு வெட்கத்தைத் தருவது அவர்கள் பாவனை முற்றி அப்பாவகப் பயஞகத் திருவருள் என்னை அத்தகுதியுடையனுக்கும் என்று நம்புகின்றேன்.'

(ஒப்பம்) அ. மு. சரவணன்.

**3. திரு. அ. பிச்சப்பிள்ளை அவர்கட்கு வழங்கிய நற்சான்றிதழ்**

['பாலஜோசியம் விருத்த வைத்தியம்' என்று கூறு வார்கள். ஆனால், அதற்கு எதிர்மறையாக அரியலூர் திரு. அ. பிச்சைப் பிள்ளை அவர்களோ, முன்னைத் தவப் பயனால், விருத்த வைத்தியர்களுடைய நூல், அனுபவ அறிவுத் திறமை இவற்றைத் தமது பால வயதிலேயே பெற்றவர்கள். தம்மைத்தேடி வருவோரையும், அழைக் கப்பட்டுத் தாம் நாடிச் செல்வோரையும் அவர்களுடைய நோய்நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச்செய்து நலப்படுத்தும் இயல்புடையவர்கள். ஐயா அவர்கள், தமக்கு தக்க மருந்துகள் கொடுத்துக் குணப்படுத்தியமைக்கு வியந்து அவர்களுக்கு எழுதிக் கொடுத்தருளிய நற் சான்றிதழ்.]

உ

சிவமயம்

"பெருஞ் சொல்விளக்கனர்"
"முதுபெரும் புலவர்"
**அ. மு. சரவண முதலியார்**
103, வடக்கு வீதி,
**மலைக்கோட்டை**

**இருப்பு : அரியலூர்**
நாள் : 26-10-58.

இங்கு ஹோமியோபதி டாக்டராய் இருக்கும் இளைஞர், அ. பிச்சைப் பிள்ளை என்பவரை யான் அறிந்து கொள்ளும் வாய்ப்புக்கிடைத்தது பற்றி மிகமிக மகிழ் கின்றேன்.

இங்குள்ள மணிவாசக மன்றத்தின் 15வது ஆண்டு நிறை விழாவை ஒட்டி ஷை மன்றத்தாரின் விருப்பப்படி

12-10-58 முதல் 26-10-58 முடிய 15 நாட்கள் சொற்பொழி வாற்றுதற்கு வந்து தங்கினேன். இடையிடையே சில நோய்கள் உடலை நலிவுறுத்தின. அவ்வப்போது டை டாக்டர் தக்க மருந்து கொடுத்துக் குணப்படுத்தினர்.

சுருங்கக்கூறின், இந்த இளம் பருவத்திலே அவரிடம் உயர்ந்த மருத்துவர்களுக்குள்ள குணமெல் லாம் அடங்கியிருத்தல் வியத்தற்குரியது.

கடவுளருளாலும், பொதுமக்கள் ஆதரவாலும் விரைவில் சிறந்த நிலையை அடைவாரென்று நம்புகிறேன்.

(ஒப்பம்) அ. மு. சரவண முதலியார்.

உ

## 7. *புலவர்கள் தலைவர்

### வித்துவான் திரு. வீ. திருமால் அவர்கள்

[இவ்விரங்கற்பாடல்கள், திரு. ஐயா அவர்களுடைய அருமை மாணவர்களுள் ஒருவராகிய டால்மியாபுரம் வழி பெருவளப்பூர் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் வீ. திருமால் அவர்களால் இயற்றப்பட் டவை. அவர்கள் சிறந்த பண்புகள் அமையப்பெற்ற வர்கள். பழகுதற்கு மிகவும் இனியவர்கள்.]

1. இலக்கணக் கடலாம் நும்முன்
இறைவன் வந் தெதிர்ந் தானேனும்
கலக்கிடும் புலமை மிக்கோய்!
கண்டுன்னே டுவப்ப தெந்நாள்
**புலவர்கள் தலைவா!** ஞான
புங்கவா! புவியோர் ஏங்க
நலமுளார் சேருங் கைலை
நன்மலை அடைதல் நன்றே!

2. தொண்டர்சீர் பரவு வாரின்
தீஞ்சுவைப் பனுவற் றேனை
மண்டல மாந்தர்க் கூட்டி
மாண்புறச் செய்த தோர்ந்தே
விண்ணவர் அமுதம் உண்ட
மையல்நோய் போக்க வேண்டி
அன்னவர் அழைப்பை ஏற்றே
அவண்விரைந் தேகி னீர்கொல்?

3. முதன்மை யார்குல விளக்காம்
முத்தெனும் பெயரோன் ஈந்த
முதல்வனே! ஞான வித்தே!
மும்மையும் மறவா தேத்தும்
பதவியைப் பெற்ருய்! எம்மைப்
பாங்குடன் நிலவச் செய்த
உதவியை எண்ணி எண்ணி
உளமிக அழிகின் றேமால்.

4. அளக்கர்சூழ் அவனி தன்னில்
அறிவுசால் ஆன்ருேர் கூடி
விளக்கமாம் 'பெருஞ்சொல் லோடு
விளக்கனர்' என்னும் பட்டம்
உளக்கம லத்திற் பூத்தே
உவப்புடன் உதவப் பெற்ற
அளப்பருஞ் சீர்த்தி வாய்ந்த
ஐய!நீ எங்குற் ருயோ?

5. பாயிரம் பரவி வாழ்த்தும்
பனசைமா நகரில் முன்னுள்
ஆயிரம் வெண்பொற் காசை
அடைந்தொரு நாளில் கூடல்

மாயிரும் புலவர் போற்ற
 'முதுபெரும் புலவ ரா'னீர்
தாயினும் இனிய ஐயா!
 தவிக்கின்றோம் உம்மை எண்ணி.

6. நிரந்தினிச் சொல்ல வல்ல
 நின்னைப்போல் புலவன் யாங்கள்
பரந்தஇப் புவியின் மீதே
 பார்த்திலம் வாச கத்தை
அரிதினில் ஆய்ந்தே ஈந்தாய்
 'அழுதடி அடைந்த அன்பர்;'
கரமதில் கொள்ள ஆக்கிக்
 கட்டுரைப் பொழிலுந் தந்தாய்.

7. வரம்பமை சைவ நாட்டு
 வண்டமிழ்ப் பாக்கள் யாவும்,
"சரவண ஐயா! எங்கோ
 சார்ந்தனை? உன்செந் நாவை
இருக்கையாக் கொண்ட யாங்கள்
 இரும்புகழ் கொண்டோம் இந்நாள்
பிரிந்தனை எங்குச் செல்வோம்"
 எனவுளம் கலங்கும் ஐயா!

8. புண்டவழ் குலிசக் கோமான்
 பூவுல குவப்ப ஆற்றும்
தொண்டுளம் எண்ணி அண்டத்
 தமரர்கள் உலகு வாழக்
கொண்டுசென் றனனோ? அன்றிக்
 கொன்றையங் கடவுள் வேட்டுத்
தொண்டர்தம் சீர்த்தி கேட்கத்
 தன்பக்கல் கொண்டான் கொல்லோ?

9. மன்னனிவ் வுலகை நீப்ப
மைந்தனின் றளிப்ப தேபோல்
தன்னினும் தகைமை சான்ற
தவம்நிறை மகவை ஈந்த
வன்மையால் வாட்டம் தீர்ந்தோம்
வள்ளலே! தமிழ்மா ணாக்கர்
புன்கணீர் போக்கி வாழ்வோம்
புகழ்மிகப் பெருக்கி ஐயா!

10. அண்ணலே! என்னை ஆண்ட
அமுதனே! அனைத்து மாகுங்
கண்ணுதல் நற்று ளெய்துங்
கல்வியை நாளும் ஊட்டும்
புண்ணிய! உனக்கே யாங்கள்
புரியும்கைம் மாற தென்னே
நண்ணியே நாளும் நின்தாள்
நலமுடன் போற்றி வாழ்வோம்.



*இவ்வாறு ஐயா அவர்களின் பிரிவு குறித்த, பலருடைய இரங்கற் செய்திகளை, காஞ்சி, திரு. சி. காளப்ப முதலியார் அவர்கள் வெளியிட்டுள்ள 'நினைவு மலரில்' பரக்கக் காணலாம்.

# மணிவாசக மன்றம்.

## அரியலூர்.

மன்றத்தில் கிடைக்கும் நூல்கள் :-

-:0:-

| | | |
|---|---|---|
| 1. சீவக நம்பி | | |
| | (திரு. அ. மு. சரவண முதலியார்) | ரூ. 1—0—0 |
| 2. கட்டுரைப் பொழில் | ( ,, ) | ரூ. 2—8—0 |
| 3. அழுது அடியடைந்த | | |
| அன்பர் ராப்பர் | ( ,, ) | ரூ. 1—4—0 |
| அட்டை | ( ,, ) | ரூ. 1—8—0 |
| 4. திருவரத்துறைத் தலவரலாறு | | |
| | (திரு. க. முருகேச முதலியார்) | ரூ. 0—5—0 |
| 5. விநாயகர் மாண்பு | ( ,, ) | ரூ. 0—5—0 |

அஞ்சற் செலவு பிரத்தியேகம்.

முத்தமிழ் அச்சகம், காஞ்சிபுரம்.